RAAS/B/1 58 TAM

இவளுக்கு

# தன்னம்பிக்கை-யூட்டுங்கள். பாங்க் ஆ:ப் இந்தியாவில்

இவள் பேரில் சேமிப்புக் கணக்கு துவங்குங்கள்.

தன் சேமிப்பும் உடன் தன்நம்பிக்கையும் வளர்வதை அவள் காணட்டும்



12 வயதும் அதற்கு மேற்பட்ட வயதுடைய குழந்தைகள் தங்களது சேமிப்புக் கணக்கை தாமே நடத்தல

கல்கி

# பொருளடக்கம்

பிரமாதீச, ஆவணி 3 — ஆகஸ்டு 19, 1973







நேஷனல் கம்பெனி, நேஷனல் தியேட்டர்களின் உரிமையாளர் திரு என். முனுசாமி முதலியார் அவர்களின் புதல்வி செல்வி: சாந்தி (M.B.B.S.) க்கும், ஈரோடு, டாக்டர் வெங்கடாசலம் பிள்ளை அவர்களின் குமாரர் செல்வன்: டாக்டர் வெ. ஷண்முகசுந்தரம் (M.B.B.S.) D.L.O.(M.S.) அவர்களுக்கும் ஜூலை 4-ம் தேதி யன்று திருமணம் சென்னை, ஆப்ஸ்பரி திருமண மண்டபத்தில் மிக விமரிசையாக நடைபெற்றது. திருமுருக கிருபானந்த வாரியாரின் மீனாக்ஷி கல்யாண உபந்யாசம் திருமணத்துக்கு முன் நடைபெற்றது. மங்களகரமான விழாவுக்குத் தெய்வமணம் கூட்டியது. குழிக்கரை எஸ். பிச்சையப்பா குழுவினரின் நாதஸ்வர இன்னிசை திருமணத்தைச் சோபிக்கச் செய்தது. வரவேற்புக்கு வந்திருந்த ஏராளமான உறவினர்களும், நகரப் பிரமுகர்களும், மணமக்களுக்குப் பரிசுகளும், ஆசிகளும் வழங்கி மகிழ்ந்தனர். வரவேற்பில் ஸ்ரீமதி எம். எஸ். சுப்புலக்ஷ்மியின் இன்னிசை அனைவரையும் மகிழ்வித்தது. வாழ்க மணமக்க




வேலைநிறுத்தத்தால் பாதிக்கப்பட்ட ரயில் போக்குவரத்து!
LOCO
லோகோ ஊழியர்
விசிலே ஊதுங்க! ரயிலைக் கிளப்பணும்!
பேச்சு வார்த்தை
அழகு தான்! அப்-புறம் பச்சைக் கொடி காட்டணும்னு கூட சொல்லுவே போலிருக்கே!
மிஸ்ரா

கல்கி
தமிழ்த்திரு நாடுதன்னைப் பெற்ற தாயென்று கும்பிடடி பாப்பா — பாரதியார்



மலர் 33 - இதழ் 3

# விலை ஏற்றத்தைக் குறைக்க வழி

**ப**யங்கரமான விலைவாசிகளின் ஏற்றத்தைக் கண்டிக்கும் வகையில் நாட்டின் பல பகுதிகளில் நடத்தப்படும் கிளர்ச்சிகளும், ஆர்ப்பாட்டங்களும், மக்களின் கஷ்டத்தை எடுத்துக் காட்டி, ஸ்தம்பித்துக் கிடக்கும் அரசாங்கத்தைத் தட்டி எழுப்ப ஒருவேளை அவசியமாயிருக்கலாம். என்றாலும், இவற்றின் விளைவு மக்களது கஷ்டங்களை மேலும் அதிகரிப்பதாகவே உள்ளது. உணவுக் கிடங்குகளைச் சூறையாடுவதும், கூட்டுறவு விற்பனை சாலைகளில் உட்புகுந்து பண்டங்களைக் கொள்ளையடிப்பதும், வர்த்தகர்களையும் கடைக்காரர்களையும் பீதி கொள்ளச் செய்துள்ளன. கட்டுக்கடங்காமல் இந்நிலை விரிவடைந்தால், ஏற்கனவே உள்ள பற்றாக்குறை நிலை மேலும் கடுமையாகி, ஏழை மக்களுக்கு அதிகக் கஷ்டத்தையே உண்டாக்கும். விலைவாசிகளும் மேலும் உயருமே தவிர, கிளர்ச்சிகளால் குறைய வாய்ப்பில்லை. கிளர்ச்சியை நடத்துவோர்களும், தூண்டிவிடுபவர்களும் அவர்கள் அரசியல் நோக்கத்துடன் செயல்பட்டாலும், பொதுநல நோக்கத்துடன் செயல்பட்டாலும் இம்மாதிரியான வேண்டாத விளைவுகளைப் பற்றி நினைத்துப் பார்த்தல் வேண்டும்.

விலைவாசி உயர்வுக்கு அரசாங்கத்தின் தவறான பொருளாதாரக் கொள்கைகள்தாம் காரணம் என்பதைப் பற்றிச் சந்தேகமில்லை.

உற்பத்தியை அதிகரிக்கும் வாய்ப்பும் திறமையும் உள்ளவர்களை இந்த அரசாங்கம் ஊக்குவிக்காமல் அழுக்குகிறது.

உற்பத்திக்குச் சற்றும் உதவாத இனங்களில் கோடிக் கணக்கில் பணம் செலவு செய்கிறது.

வரம்புக்கு அதிகமாக நோட்டு அச்சடித்து வழங்குகிறது. திறமையாக நிர்வகிக்க முடியாது என்ற நிலைமையிலும், சர்க்கார் ஆதிக்கத்தின்கீழ் உற்பத்தி விநியோகத் துறைகளின் பல அம்சங்களைக் கொண்டு வந்துள்ளது.

விளைவு—எடுத்ததற்கெல்லாம் கட்டுப்பாடு, அனுமதிச்சீட்டு, கியூவரிசை!

இப்படி ஒன்றன்மீது ஒன்றாகப் பல தவறான நடவடிக்கைகளைமேற்கொண்டதால் ஏற்பட்டதுதான் இப்போதைய பயங்கர விலைவாசி நிலை.

வாழ்க்கைக்கு அத்தியாவசியமான உணவுப் பொருள்களையும், இதர பொருள்களையும் நியாயமான விலையில் மக்களுக்குக் கிடைக்கச் செய்ய அரசாங்கம் கடமைப்பட்டுள்ளது. இதை அரசாங்கக் கொள்முதல், வியாபாரம் இவற்றால் சாதிக்கவே முடியாது.

அரசாங்கம் இப்போது செய்யும் கொள்முதலை அவசியமான ஒரு குறுகிய அளவுக்கு மட்டும் வைத்துக் கொண்டு மிகுதியைத் தனியார் வர்த்தகர்களுக்கு விடுவதுதான் முறை; அவசியமும் கூட. ரேஷன் முறை அமலில் இருக்கும் பகுதிகளில் (கோதுமை, எண்ணெய், அரிசி போன்ற) அத்தியாவசியப் பொருள்களை மட்டும் ரேஷனுக்குத் தேவையான அளவு அரசாங்கம் கொள்முதல் செய்தாலே போதும். மிச்சமுள்ளதை ஏற்கனவே விநியோகத் துறையில் ஈடுபட்டுள்ள ஏராளமான வியாபாரிகளுக்கு விட்டுவிட வேண்டும்.

அவ்விதம் செய்தால் இப்போது வர்த்தகர்களிடையே அரசாங்கத்துக்கு எதிராகத் தோன்றியுள்ள பகைமை உணர்ச்சியும், ஒத்துழையாமை மனப்பான்மையும் மறையக் கூடும். கிராமப்புறங்களிலும், சில நகர்ப்புறங்களிலும் விவசாயிகளிடத்திலும், வியாபாரிகளிடத்திலும், நிச்சயமற்ற வருங்காலத்தைப்பற்றிய பீதியினால் பாதுகாப்புச் சேமிப்பாக நிறுத்தி வைக்கப்பட்டுள்ள உணவுப் பண்டங்கள் மார்க்கெட்டுக்கு விநியோகத்துக்கு வரக் கூடும். இதன் மூலம் ஓரளவுக்கு விலைவாசிகள் குறைய வாய்ப்பு உண்டாகலாம்.

வியாபார், வணிகத் துறையில் அரசாங்க நிறுவனங்களும், தனியார் நிறுவனங்களும் நட்புணர்ச்சியுடன் போட்டிபோட்டுக்கொண்டு செயல்பட இப்போதுள்ள நிலைமை வாய்ப்பளிக்கிறது. இந்தச் சந்தர்ப்பத்தைப் பயன்படுத்திக் கொண்டு, ''அரசாங்கமே ஏகபோகக்

கொள்முதல் செய்யும்'' என்ற தவறான நடவடிக்கையைக் கைவிடுவது நல்லது.

தனியார்த் துறை, அரசுத் துறை தவிர இரு சாராரும் இணைந்து செயல்படும் கூட்டுத் துறையும் தொழில் துறையில் தேவையென இன்றைய அரசு கருதுகிறது. இம்முறையை வியாபார - வணிகத் துறையிலும் குறிப்பிட்ட அளவுக்குப் பரீட்சார்த்தமாகக் கையாண்டு பார்க்கலாம்.

இத்துடன் நின்றுவிடாமல், பற்றாக்குறை காணப்படும் எல்லாப் பொருள்களின் உற்பத்தியைப் பெருக்கவும் ஊக்கமும் உற்சாகமும் அளிக்க அரசாங்கம் முழு மனத்துடன் முன்வர வேண்டும். அவசியமில்லாத வீண் செலவுகளைக் கட்டுப்படுத்துவதில் கண்டிப்புக் காட்ட வேண்டும். என்ன நேர்ந்தாலும் ஐந்தாவது திட்டம் திட்டியபடி நிறைவேறியே தீரும் என்பது போன்ற டம்பாச்சாரிப் பேச்சுக்கள் பேசாமலிருத்தலும் நன்று. பிரத்யட்ச நிலைமையை உணர்ந்து பலன் தரக்கூடிய நடவடிக்கைகளை மேற்கொள்ள வேண்டும்.

# தமிழ் நாட்டிலே...

தீரன் -

## உண்மை வெளியாகிறது

'அதிகாரிகளிடம் கட்சி ஆட்கள் தலையிடுவது கூடாது' என்று திண்டுக்கல் தேர்தலுக்குப் பின் தி. மு. க. பொதுக் குழுவில் தீர்மானம் செய்யப்பட்டதும் அதையடுத்து முதல்வர் கருணாநிதி அந்தத் தீர்மானத்தை ஓர் அட்டையில் எழுதித் தம் மேஜை மேல் வைத்துக் கொண்டதும் பற்றி யாரும் இதற்குள் மறந்திருக்கமாட்டார்கள். ஆனால் இப்போது தெரியவந்திருக்கும் ஒரு புதிய விவரம் நாய் வால் நிமிராது என்பதைத்தான் காட்டுகிறது.

தி.மு.க. நகர சபைத் தலைவர் ஒருவர் போலீஸ் அதிகாரி ஒருவருக்கு எழுதிய கடிதம் ஒன்றின் புகைப்படம் எதிர்க் கட்சிப் பிரமுகரால் தமிழ் நாடு சட்டசபையில் காட்டப்பட்டிருக்கிறது.

அந்தக் கடிதத்தில் இருந்து தெரியவரும் விவரங்கள் வருமாறு:

தி. மு. கழகத்திலிருந்து விலகிய ஒருவருக்கு மேற்படி நகர சபைத் தலைவர் போலீஸ் மூலம் தொல்லைகள் கொடுத்திருக்கிறார் போலும். விலகிய ஆள் மறுபடி தி.மு.க.வில் சேர்ந்ததாக எழுத்து மூலம் எழுதிக் கொடுத்தவுடன்,

''........சர்க்கிள் இன்ஸ்பெக்டர் அவர்கள் சமூகத்துக்கு வணக்கம்...........ன் எம்.ஜி.ஆர். கட்சியிலிருந்து விலகிவிட்டான். கழகத்தில் சேர்ந்து எழுதிக் கொடுத்துவிட்டான். அவன் பேரில் (இனி) எவ்வித நடவடிக்கையும் எடுக்க வேண்டாம்'' என்று எழுதிக் கையெழுத்துப் போட்டுக் கடிதம் அனுப்பியிருக்கிறார் அந்தத் தி. மு. க. நகரசபைத் தலைவர்.

மேலே குறிப்பிடப்பட்ட நகர சபைத் தலைவரின் ஊர், பேர், அடங்கிய கடிதத்தின் புகைப்பட நகலை செய்தித் தாள்களில் பிரசுரமாகி இருக்கிறது. எச்சரிக்கை அட்டை முதல்வர் மேஜைக்கு அலங்காரம்தான் போலும்!

## எங்கிருந்தோ வந்த யாரோ...?

இம்மாதத் தொடக்கத்தில் தமிழக அமைச்சரவை மீது எதிர்க்கட்சிகள் ஒருங்கிணைந்து கொண்டு வந்த நம்பிக்கை இல்லாத் தீர்மானம் பற்றி விவாதிக்கும்போது ஆளும் கட்சி உறுப்பினரும், ஆளும் கட்சியின் தோழமைக் கட்சி உறுப்பினரும் கூறியுள்ள சில வாக்கியங்களைப் பொதுமக்கள் அனைவரும் அறிய வேண்டியது அவசியம். அப்படி அறிந்தால்தான் சட்டசபையில் எப்படி எப்படி எல்லாம் பேசுகிறவர்கள் இருக்கிறார்கள் என்பது மக்களுக்குத் தெரியும்.

''எங்கேயோ பிறந்து எங்கேயோ வளர்ந்து இங்கே வந்தவர்கள்....'' என்று ஆளும் கட்சியின் உறுப்பினர் ஒருவர் பேசியிருக்கிறார். இன்னொரு சட்ட மன்ற உறுப்பினர், ''ஆடு மேய்க்க வந்தவர்கள், மாடு மேய்க்க வந்தவர்கள் எல்லாரும் தமிழ் நாட்டுக்கு வந்து அதிகாரம் செலுத்த அனுமதிக்கமாட்டோம்'' என்று திருவாய் மலர்ந்தருளியிருக்கிறார். இங்கு மக்கள் தலைவனாகத் திறமையாளன் ஒருவன் விளங்க பாரதப் பிரஜை என்ற அந்தஸ்து ஒன்றே போதாதா?

## ஒரே நாளிதழுக்கு 13 லட்சம்

தமிழ்நாட்டு முதல்வரின் குடும்பத்தினர் நடத்தும் 'முரசொலி' பத்திரிகைக்கு மட்டுமே தமிழக அரசின் விளம்பரங்கள் மிக அதிக அளவில் கொடுக்கப்பட்டுள்ளன. ஆனால் அந்த நாளிதழைவிட எண்ணிக்கையில் பல மடங்கு அதிகமாக விற்பனையும் செல்வாக்கும் உள்ள வார இதழ்கள், நாளிதழ்களுக்கு அரசாங்க விளம்பரமே தரப்படுவதில்லை. தி.மு.க. சார்புள்ளவர் நடத்தும் சில நூறு பிரதிகள் மட்டுமே விற்கிற இதழ்களுக்குக் கூட அரசாங்க விளம்பரங்கள் தரப்படும் போது பொதுவான பல பத்திரிகைகளுக்கு ஏனோ அரசாங்க விளம்பரங்கள் கிடைப்பதில்லை. சட்டசபையில் ஒரு கேள்விக்குப் பதில் அளிக்கும்போது லாட்டரிச் சீட்டு விளம்பரங்கள் வேறு பத்திரிகைகளுக்குக் கொடுக்கப்பட்டிருப்பதை அமைச்சர் சுட்டிக் காட்டியிருந்தாலும் திரு கருணாநிதி முதலமைச்சராக வந்தபின் அவருடைய குடும்பத்தினருக்குரிய முரசொலிப் பத்திரிகைக்கு மட்டுமே பதின்மூன்று லட்சம் ரூபாய் வரையில் விளம்பரங்கள் கொடுக்கப்பட்டிருக்கின்றன என்ற தகவல் சிந்தனை செய்வதற்குரியது.

மாரி காலம்!


நம்பிக்கையில்லாத் தீர்மான மழை
தி.மு.க. ஆட்சி
மாநில சுயாட்சி – 'அன்னியர்' நுழைமை குட்டை


லஞ்ச ஊழல் ஆட்சி: இல்லேன்னு அண்ணா பெயரால் சத்தியம் பண்ணத் தயார்னு நம்ம தலைவர் சொன்னாராமே?
ஹி..ஹி! இது சாராயக்கடையே இல்லேன்னு அண்ணா பெயரால் நான் சத்தியம் பண்ணத் தயார்!... அதுக்கு என்ன சொல்றே!

## இரட்டிப்புப் பெருமை

நடப்பு ஆண்டு 1973—74க்குத் தென்னிந்தியத் தொழில் வர்த்தகச் சங்கத்தின் தலைவராக இரண்டாவது தடவையாகத் தேர்ந்தெடுக்கப்பட்டிருக்கிறார் சித்ரா திரு எஸ். நாராயணஸ்வாமி. தொழில் துறை, முதலீட்டுத் துறை, வர்த்தகத் துறை ஆகிய எல்லா அம்சங்களிலும் அனுபவமும் ஆழ்ந்த ஞானமும் உடையவர். இத்துறைகளின் சார்பில் குறைகளை அழுத்தமாகவும், அன்பாகவும் எடுத்துச் சொல்ல முற்றிலும் தகுதிவாய்ந்த தலைவர். தமிழகத்துக்கு அவருடைய பதவி காலம் பயனுள்ளதாக அமையட்டும்.



திரு எஸ். நாராயணசாமி

## கடற்கரையில் நடந்தது

சென்ற வாரம் டாக்டர் ஜெயராமன் என்பவரும் அவருடைய நண்பர்களும் கடற்கரையில் காற்று வாங்கச் சென்று அமர்ந்திருக்கிறார்கள். சிறிது நேரத்தில் டாக்டர் மட்டும் தனியே காரில் போய் அமர்ந்திருந்த போது யாரோ முன்பின் தெரியாத இருவர் வந்து, ''உடனே எங்களைக் காரில் ஏற்றிக் கொண்டு மவுண்ட்ரோட்டில் விட்டால்தான் ஆயிற்று'' என்று வற்புறுத்தியிருக்கிறார்கள். டாக்டர் அதற்கு இணங்க மறுத்ததும் அவர்கள் இருவரும் சைக்கிள் செயினால் அவரைத் தாக்கிக் காயப்படுத்தியிருக்கிறார்கள். டாக்டருக்கு உதவ வந்தவர்களையும் தாக்கிவிட்டு ஓடிய அவர்களைப் பொது மக்களும் பிறரும்துரத்திப் பிடித்துப் போலீஸ் வசம் ஒப்படைத்ததாகத் தெரிகிறது. கற்கால நாகரிகத்தில் வாழ்கிறோமா என்று எண்ண வைக்கும்இதுபோன்றசம்பவங்களால்சட்டம், போலீஸ், இவற்றுக்கு முன்பிருந்த மதிப்பும் மரியாதையும் இன்றைய ஆட்சியில் மிகவும் குறைந்து வருவது கண்கூடாகத் தெரிகிறது.

## அரசியல் கைதிகள்

சமீபத்தில் சென்னையில் கைதான விவசாய சங்கத் தலைவர்கள் சிறையில் உடை மாற்றுவதற்குக்கூட வழியில்லாமல் ஏறக்குறைய ஒரு வார காலம் கழிக்க நேர்ந்திருப்பதாகத் தெரிகிறது.வழக்கறிஞர்களோ, அரசியல் கட்சிப் பிரமுகர்களோ கைதானவர்களைச் சந்திக்க முடியாமல் தடுக்கப்பட்டனர் என்றும் கைதானவர்கள் ஒருவரை ஒருவர் சந்தித்துக் கொள்ள முடியாமல் பிரித்து வைக்கப்பட்டனர் என்றும், பிஸ்கட் தருவது கூட மறுக்கப்பட்டது என்றும் தெரிகிறது. பிரிட்டிஷ் ஆட்சியின் தொடக்க காலத்தில் செய்யப்பட்ட சிறைக் கொடுமைகள் பழுத்த அரசியல்வாதிகளுக்கு நினைவுவரும். இந்தியாவில் நாம் சுதந்திர இந்தியாவில்தான் இருக்கிறோமா என்றே சந்தேகம் வருகிறது.

## மிரட்டலில் ஒரு வகை

தமிழக முதல்வர் மாநில சுயாட்சி மிரட்டலைத் தமது பேச்சுக்களில் பலவிதமாக மாற்றி மாற்றி அவ்வப்போது தெரிவிக்கிறார். அவை மறைமுகமான அல்லது நேரடியான மிரட்டல்களாகவே அமைந்துள்ளன.

''தி.மு.க. என்ற பாஸ்பரஸ், ஆட்சி என்ற தண்ணீரில் இருக்கிற வரைதான் பற்றி எரியாமல் இருக்கும். ஆட்சி என்ற தண்ணீருக்கு வெளியே வந்துவிட்டால் பெரிதாகப் பற்றி எரிப்பதற்குத் தயங்காது'' என்ற அர்த்தத்தில் திருநெல்வேலியில் ஒரு கூட்டத்தில் பேசியுள்ளார் தமிழக முதல்வர்.

''எங்களை ஆட்சியைவிட்டு நீக்கினால் மக்களையும் நாட்டையும் என்ன என்ன செய்வோம், தெரியுமா? ஜாக்கிரதை!'' என்கிற பாணியில் ஒரு முதல்வரா பேசுவது? ஆம்! பேசியிருக்கிறவர் முதல்வர்தான்!

## ராஜாஜி சிந்தனை

நம்முடைய நம்பிக்கையும், மரியாதையும் வறண்டதைத் தொடர்ந்து நம்முடைய கலையும் வறண்டு விட்டது. அன்பு, நம்பிக்கை, மரியாதை ஆகியவை ஓர் ஓவியம் அல்லது சிற்பம் அல்லது கலைச் சின்னத்தில் பிரகாசிக்கும்போதுதான் அதைப் பார்த்து ''எவ்வளவு அழகாக இருக்கிறது'' என்று நம்மால் வியந்து பாராட்ட முடியும். அங்க லட்சணம், வர்ணக் கலவை முறை ஆகியவை மட்டும் தெரிந்திருந்தால் போதாது. அதனால்மட்டும் சிறந்த கலையைச் சிருஷ்டித்துவிட முடியாது. பெருமையாக வாழ்வதன் மூலமே ஒரு நாட்டின் கலை பெருமையடைய முடியும். வேறு வழியில் இதை அடைய முடியாது. கலைக்குப் புனர்வாழ்வளிக்க வேண்டுமென்று நாம் விரும்பினால், நம்மிடம் நம்பிக்கையும், அன்பும், உண்மையான மதிப்பும் இருக்க வேண்டும். இல்லாவிட்டால் உயர்ந்தபட்சமாக நம்மால் செய்யக் கூடியது இயற்கைக் காட்சிகளை வரைவதுதான். இத்துறையிலும் கூட எந்த அளவுக்கு நம்மால் வானத்தையும், பூமியையும், நீரையும் வியப்புடனும், மதிப்புடனும் அணுக முடிகிறதோ, அந்த அளவுக்குத்தான் வெற்றியடைய முடியும். வியப்புடனும் மரியாதையுடனும் ஒன்றை அணுகுவதுதான் மதமாகும்.

# இறுதியாக—செயற்கை இழைத் துணிகளுக்கு ஒரு வெண்மை தரும் சாதனம்

# டினோபால்®-எஸ்

டெரீன், 'டெரீன்'/காட்டன், நைலான் முதலான துணிகளுக்கு வெண்மை தருகிறது

Tinopal®-S
Tinopal®-S
Tinopal®-S
Tinopal®-S



உங்களது செயற்கை இழை மற்றும் கலப்பு இழைத் துணிகளை சலவை செய்த பிறகு கடைசியில் அலசுவதற்கு முன், தண்ணீரில் சிறிது டினோபால்-எஸ் சேர்க்கவும். உங்கள் வெள்ளைத் துணிகளில் மிருந்த வெண்மை பளிச்சிடும். டினோபால்-எஸ்ஸின் திறனுல் தடவைக்கு தடவை வெண்மை மிளிரும்!

**இன்றே டினோபால்-எஸ் வாங்குவீர்**




## டினோபால்®-எஸ்

### செயற்கை இழைத் துணிகளுக்கு

**சிறந்த வெண்மை தருகிறது**

Shilpi HPMA 13 D/73 Tam

நம் திருநாட்டின்
சுதந்திர தினமாம் இன்னாள்.
தேசீயப் பண்புகளிலும்
குறிக்கோள்களிலும் தனக்குள்ள
அசையாப் பற்றுதலை மீண்டும்
வலியுறுத்திக் கொள்கின்றது
இண்டியன் ஆயில்.
அரசியலமைப்பிலே அறநீதி,
சுதந்திரம், சகோதரத்துவம்
அனைத்துமே நம் குடிமக்கள்
ஒவ்வொருவருக்கும்
கிடைத்திடும் வகையில்
முன்னேற்றச் சக்கரங்களை
முன்னிலும் மும்மரமாக
இயக்குவிக்க மீண்டும்
உறுதிபூண்டிடுகின்றது.




—பொருளாதார வளமைக்கான
தேசீய ஸ்தாபனம்

இண்டியன் ஆயில் கார்பொரேஷன் லிமிடெட்

# காரணமில்லாத பக்தி

## ஜகத்குரு ஸ்ரீ காஞ்சி காமகோடி சங்கராசாரிய சுவாமிகள்

பல காரணங்களுக்காகப் பக்தி புரிந்தாலும், முக்தியை வேண்டிப் பக்தி செய்வதே இவற்றில் ஸ்ரேஷ்டமாகும். 'ஞானத்தினால்தான் நேரடியாக முக்தி கிடைக்கும்; ஈசுவர உபாசனையாகிய பக்தியால் அல்ல' என்பதே ஸ்ரீ சங்கரர் முதலிய அத்வைத ஆசாரியர்களின் கருத்து. முக்தி என்றால் என்ன? 'விடுபடுவது' என்று அர்த்தம். விடுபடுவதைத்தான் தமிழிலும் 'வீடு' என்று சுருக்கிச் சொல்கிறார்கள். எதிலிருந்து விடுபடுவது? சம்சாரத்திலிருந்து விடுபடுவதுதான் முக்தி. மறுபடி மறுபடி பிறந்துகொண்டும் செத்துக்கொண்டும் இல்லாமல் நித்தியமான சத்திய நிலையை அடைவதுதான் முக்தி. மனசு என்று ஒன்று இருப்பதால்தான் சம்ஸார பந்தம் தெரிகிறது. மனசு மறைந்தால்தான் பந்தத்திலிருந்து விடுதலை. ரூபம், குணம் இவை இருக்கிறவரையில், இவற்றை அநுபவிக்கிற மனசும் இருக்கத்தான் செய்யும். பக்தி செலுத்துகிறபோது ஈசுவரனுடைய ரூபம், குணம், எல்லாவற்றையும் மனசினால் அநுபவிக்கிறோம். பக்தி நிலையிலும் பலவிதமான உணர்ச்சிகள், பரவசம், ஆனந்தம், அழுகை எல்லாம் இருக்கத்தான் செய்கின்றன. மனசு அதற்கு ஆதாரமான வஸ்துவில் கரைந்துபோய் அந்த ஆதார வஸ்து மட்டும் நிற்கும்போதுதான் எந்த மாறுதலும் இல்லாத சாந்த நிலை — முக்தி அல்லது மோட்ச நிலை சித்திக்கிறது. இந்த மனசுக்கு ஆதாரமாக இருக்கிற ஆத்மா என்பது என்ன என்று அனவரதமும் விசாரம் செய்து கொண்டே இருப்பதுதான் ஞான மார்க்கம் என்பது. இதே விசாரத்தில் மனசை முழுக்கினால், கடைசியில் தானாகவே மனசு மறைந்து ஆத்மா இன்னதென்று தெரிந்துவிடுகிறது. ஆத்ம சாட்சாத்காரம் என்கிற அந்த நிலையே விடுதலை அல்லது முக்தி என்று தெரிகிறது.

ஆனால் கோபாலகிருஷ்ண பாரதியார், ''பக்தி பண்ணிக் கொண்டிருந்தால் முக்தி பெறலாமே'' என்று பாடுகிறார். வைகுண்டத்துக்குப் போவதுதான் முக்தி, கைலாசத்துக்குப் போவதுதான் முக்தி என்பவர்களைப் போல் இவர் சொல்லவில்லை. அந்தந்த தேவதைகளிடம் பக்தி செலுத்தினால், அததற்கு உரிய லோகத்துக்கு — வைகுண்டம், கைலாசம் போன்றவற்றுக்கு — செல்லலாம். த்வைதிகளும் விசிஷ்டாத்வைதிகளும் இதையே முக்தி என்பார்கள். ஆனால் இங்கேயும் ஈசுவரன்—பக்தன் என்கிற பேதமும் அதை அநுபவிக்கிற மனசின் ஆட்டமும் இருக்கத்தான் செய்யும். எல்லாம் ஒன்றுபட்டுப் போகிற அத்வைத முக்தி இதற்கு வேறானது. கோபாலகிருஷ்ண பாரதியார் அத்வைதியாக இருந்தும் இப்படிப் பாடுகிறார். ஞானம்தான் பக்திக்கு நேர் சாதனம் என்று சொன்ன அத்வைத பரமாசாரியரான சங்கரரும் நிறைய பக்தி ஸ்தோத்திரம் செய்திருக்கிறார்; க்ஷேத்திராடனமும் தீர்த்தாடனமும் செய்திருக்கிறார்; அவருடைய மடத்தில் வந்துள்ள நாங்களும் மணிக் கணக்காக மூர்த்தி பூஜை பண்ணுகிறோம். இது ஏன்?

ஆத்மா எப்படி இருக்கும் என்று மனசுக்குத் தெரியாது. மனசே ஆத்மாவிலிருந்துதான் முளைத்திருக்கிறது. எனவே இந்த மனசால் ஆத்மாவை எப்படி அளக்க முடியும்? மனசு மறைந்தால்தான் ஆத்ம ஸ்வரூபம் பளிரென்று பிரகாசிக்கிறது. ஆனால் நம் மனசோ அலை பாய்ந்தபடிதான் இருக்கிறது. எனவே முதலில் பல திசைகளில் போகிற சிந்தனையை ஒருமுகப்படுத்த வேண்டும். இதற்குத்தான் பக்தியை வழியாக வைத்துள்ளார்கள். உலக விஷயங்கள் மனசை நாலு திசையிலும் சிதற அடிப்பவை. ஆனால் ஈசுவரனையே சிந்திக்கச் சிந்திக்க மனம் அவன் ஒன்றிடமே குவிந்து, தைல தாரையாக — அதாவது பிசிர் இல்லாமல் எண்ணெய் கம்பியாக ஒழுகுவது போல் — சித்தம் அவனிடமே ஒருமுகப் படுகிறது. மனசு ஒருமுகப்படுகிற இந்த நிலை முற்ற முற்ற மனசே மறைந்து போகத் தொடங்கும். இவ்விதமாக ஞானத்துக்குப் பக்தியே துணை புரியும். இதனால்தான் ஸ்ரீ சங்கர பகவத்பாதர்கள் பக்தியை ஞானத்துக்குப் படியாக வைத்தார்.

ஆத்ம சாட்சாத்காரம் என்கிற முக்தி செத்துப் போன பின் எங்கேயோ போய் அடைகிற நிலை இல்லை. முக்தி எய்திய பின்னும் நம்முடன் உயிர் வாழ்கிற பிரம்ம ஞானியைத்தான் ஜீவன் முக்தன் என்கிறோம்.

இப்படிப்பட்ட பிரம்ம ஞானிகளிலும் சிலர் பக்தர்களாக இருந்திருக்கிறார்கள் — அதாவது பிரம்மத்தின் ஏதோ ஒரு தேவதா ரூபத்தில் எல்லை இல்லாத அன்பை வைத்திருக்கிறார்கள். இவர்களுடைய பக்திதான் காரணமில்லாத பக்தி. பக்தி செய்வதால் இவர்கள் பெறக்கூடிய பயன் ஏதும் இல்லை. ஏனெனில் வாழ்க்கைப் பயன்களில் எதற்கு மேலாக ஏதுமில்லையோ அந்த முக்தி நிலையே இவர்களுக்குச் சித்தித்துவிட்டது. அதற்கு மேலாக அடைய வேண்டியது என்ன இருக்கிறது? இருந்தாலும் ஈசுவரனாகத் தோன்றுகிற பிரம்மத்தின் லீலா சக்தியை இவர்கள் ரசித்துக் கொண்டு, அற்புத லீலை செய்கிற அந்த ஈசுவரனை ஓர் இஷ்ட மூர்த்தியாகக் கண்டு அதனிடம் காரணமே இல்லாத—பிரதிபிரயோஜனமே எதிர்பாராத — உத்தமமான அன்பைப் பொழிகிறார்கள். இந்த பக்தியைத்தான் பிறவியிலிருந்தே பிரம்ம நிஷ்டரான சுகர், ''அஹைதுகீ பக்தி'' என்கிறார். ஹேது என்றால் காரணம். காரணமே இல்லாதது அ-ஹைதுகீ. இது முக்தி வந்ததற்குப் பிந்தைய நிலையிலுள்ள பக்தி.

(அடுத்த இதழில்:
முக்திக்கு முந்தைய நிலையில் பக்தி)



# இதோ இரண்டாவது அணி!

'அரசுத் துறை நிறுவனங்கள் குறைந்தபட்சம் பத்து சதவீதம் லாபமாவது காட்ட வேண்டும்' என்று சமீபத்தில் அடித்துச் சொன்னார் ஓர் அமைச்சர்.

'சோஷலிஸ சித்தாந்தத்துக்கும் லாபநோக்கத்துக்கும் ஒத்து வராதே. ஒன்றுக்கொன்று 'அலர்ஜி' ஆயிற்றே? அவ்வாறிருக்க யார் இவ்வளவு தைரியமாகப் பேசியது?' என்று நிமிர்ந்து உட்கார்ந்து கொண்டு தினசரியை உதறி மறுபடியும் அந்தச் செய்தியை ஆழ்ந்து படித்தேன்.

மத்திய அமைச்சர் திரு டி. ஏ. பை அவர்கள்தான் அவ்வாறு பேசியிருந்தார். 'பேஷ்! லாபம் காண வேண்டும் என்ற சொற்களைக் கூசாமல், தயங்காமல் சொல்ல ஒரு வெள்ளிவிழா காலத்துக்குப் பிறகாவது ஓர் அமைச்சர் பாரத நாட்டுக்குக் கிடைத்தாரே' என்று சந்தோஷப்பட்டுக் கொண்டேன்.

லாப நோக்குடையவர்களைப் பண மூட்டைகள் என்று வர்ணிப்பவர்களுக்கிடையில், தனியார்த் துறையோ அரசுத் துறையோ எதுவானாலும் சரி, லாப நோக்கு இருந்தால்தான் நாட்டின் தொழில் வளரும் பொருளாதாரமும் சிறக்கும் என்ற அடிப்படைத் தத்துவத்தைப் புரிந்துகொண்ட ஒருவராவது இருப்பது மனத்துக்கு ஆறுதல் அளிக்கத்தானே செய்கிறது!

திரு டி. ஏ. பை அச்சமோ தயக்கமோ இன்றி வேறு பல விஷயங்களிலும் தமது சுதந்திரக் கருத்துக்களை வெளியிடுவதை அண்மையில் கோவைக்குச் சென்றிருந்தபோது கேட்டு மகிழ்ந்தேன். கோவையில் அவர் தங்கியிருந்த சில மணி நேரங்களில் முதல் அலுவலாக பி. எஸ். ஜி. ஆர். கிருஷ்ணம்மாள் பெண்கள் கல்லூரிக்கு விஜயம் செய்தார். விமானப் போக்குவரத்துத் தாமதம் காரணமாக (நம் நாட்டில் எதுதான் காலத்தில் நடக்கிறது. ஓடுகிறது அல்லது பறக்கிறது?) அவர் காலம் தாழ்த்தி வந்ததைப் பொருட்படுத்தாமல், வெய்யிலை லட்சியம் பண்ணாமல், அன்று ஞாயிற்றுக்கிழமை விடுமுறை தினம் பாழாகிவிட்டதாகக் கருதி முணுமுணுக்காமல் அத்தனை மாணவிகளும் அதிகாலை 7-45 லிருந்தே கல்லூரியில் கூடி அமைதியாய் இருந்து கட்டுக்கோப்பான வரவேற்பு அளித்தது அமைச்சரின் நெஞ்சை நெகிழச் செய்துவிட்டது.

"பொறுமையாக இருப்பது நல்லதுதான். ஆனால் பொறுமை மட்டும் போதாது. ஆக்கரீதியான காரியங்களில் ஈடுபட்டுவிட்டு அந்தச் செயல்கள் பலன் தரும் வரையில் பொறுமையோடு காத்திருப்பது நல்லதுதான்" என்றார் மந்திரி.

இதைக் கேட்டபோது, நமது பிரதமரும் பொறுமையை மட்டும் மக்களுக்குப் போதிக்காமல் விலைவாசி உயர்வு, பண வீக்கம் இவற்றைக் கட்டுப்படுத்த ஆக்க ரீதியான காரியங்களைச் செய்துவிட்டு அப்புறம் பொறுமையைப் போதித்தால் நன்றாயிருக்கும் என்று தோன்றியது எனக்கு. இவ்வாறு நடந்து கொள்ளாததால் தானே மக்கள் பொறுமை இழந்து இன்று நாட்டின் பல இடங்களில் கொள்ளை அடித்தல், தீ வைத்தல் போன்ற காரியங்களில் ஈடுபடுகின்றனர்!

அமைச்சர் திரு டி. ஏ. பை தொடர்ந்து போர்க்களத்தை நினைவூட்டிப் பேசினார். அப்பழுக்கு இல்லாத சீருடை தரித்து ஆயிரக்கணக்கான மாணவிகள் தேகப் பயிற்சிகளை இம்மியும் பிசகாமல் செய்து தங்களுக்குள்ள கட்டுப்பாட்டினை உணர்த்தியதானது அவருக்கு ராணுவத்தை ஞாபகப்படுத்திவிட்டதுபோலும்!

"இன்றைய இந்தியாவில் எல்லாமே சரியாக நடைபெற்றிருக்கிறது என்று சொல்ல முடியாது. மூதிய தலைமுறையினர் தவறுகள் இழைத்திருக்கிறார்கள். அந்தத் தவறுகளின் பலாபலன்களையும் அனுபவிக்கிறோம். ஆனால் மூதிய தலைமுறையினரின் இந்தத் தவறுகள் காரணமாக இளம் தலைமுறையினர் வலுவிழந்து, நெஞ்சுரம் இழந்து போகலாமா? தோல்வியை ஒப்புக் கொள்ளாது போராட்டத்தை இளம் தலைமுறையினர் தொடர வேண்டும். எப்படி யுத்த களத்தில் ஒரு பட்டாளம் வீழ்ந்துபட்டால் அதன் பின் உள்ள மற்றொரு அணி முன்வந்து போரிடுகிறதோ அப்படி இன்றைய இளைஞர் சமுதாயம் நாட்டிலுள்ள குறைகளைப் போக்க முன் வர வேண்டும்" என்றார் திரு டி. ஏ. பை.

துரிதமான முன்னேற்றத்துக்குச் சுலபமான வழி அறிவாற்றலைக் கண்ட இடத்தில் அதை மதித்துப் போற்றி நாட்டு முன்னேற்றத்துக்கு அதனைப் பயன்படுத்துவதுதான். கர்வம், பொறுமை காரணமாகவோ

ஜாதி வித்தியாசம் பாராட்டியோ அல்லது அரசியல் சித்தாந்தங்களுக்கு அடிமைப் பட்டோ அறிவாற்றலை அமுக்கிவிடப் பார்த் தால் நாட்டின் முன்னேற்றம் தடைப்படத் தான் செய்யும் என்பதை நாசூக்காக வெளி யிட்டார் திரு டி. ஏ. பை, நோபல் பரிசு பெற்ற விஞ்ஞானி கொரானாவை உதார ணம் காட்டி.

திரு பை அவர்களின் பாராட்டுக்களைப் பெற்ற, கிருஷ்ணம்மாள் கல்லூரி மாணவி களின் கட்டுப்பாடு, ஆசிரியைகளின் அடக்கு முறை காரணமாக ஏற்பட்டதல்ல என்பது நிதரிசனமாகத் தெரிந்தது. சுதந்திர சிந்தனை, செயலூக்கம் காரணமாக விளைந்த பொறுப் புணர்ச்சியுடன்கூடிய கட்டுப்பாடு அது என், பதை உணர்ந்தேன். இது மிகுந்த மன நிறை வைத் தந்தது.

இக்கல்லூரி மாணவிகள்தாம் எவ்வளவு அதிர்ஷ்டசாலிகள்! கம்பீரமான கட்ட டங்கள்; பரந்து விரிந்த் விளையாட்டு மைதா னங்கள்; நிழல் பரப்பும் மரங்கள்; ஹாஸ்டல் வசதிகள்; திறந்தவெளி அரங்குகள்; விஞ் ஞானக் கூடங்கள்! ஆ! அந்த அருமையான நூலகம்! அதனுள்ளே ஆளைத் தள்ளிக் கதவைச் சாத்திவிடலாம். சிறைவாசத்துக்குத் தயார்! நாளைக்கு மூன்று வேளை அந்தக் கிச் சடியை மட்டும் அனுப்பிவிட்டால் போதும்!

'அந்தக் கிச்சடி என்றால்?.... எந்தக் கிச்சடி' என்கிறீர்களா? ஆம், அதில் ஒரு விசேஷம் இருக்கிறது. திரு டி. ஏ. பை அவர்களின் விமானம் நாலு மணி நேரம் தாமதமாக வரு கிறது என்று அறிந்ததுமே கல் லூரியின் ஸ்தாபகரும் கரஸ் பாண்டெண்டுமான ஸ்ரீமதி சந் திரகாந்தி தம்மீது ஒரு பெரும் பொறுப்பு சுமத்தப்பட்டுவிட் டதை உணர்ந்து கொண்டார். பள்ளி, கல்லூரி மாணவிகள், ஆசிரியைகள் எல்லாரும் அதி காலையில் ஏதாவது கொஞ் சம் ஆகாரம் பண்ணிவிட்டு வந்திருக்கலாம். பலர் பத்து மணிக்கு வீடு திரும்பி விடலாம் என்கிற எண் ணத்தில் வெறும் வயிற் றோடுகூட வந்திருக்கலாம். தாய் உள்ளத்தில் இந்த எண்ணம் உதித்ததுதான் தாமதம். உத்தரவுகள் பிறந்தன; ஆட்கள் பறந் தனர்; பருப்பும் ரவையும் இதர சேர்மானங்களும் வந்து சேர்ந்தன. சிறுமி களும், யுவதிகளும், மாதர்களுமாக அந்தப் பள்ளி, கல்லூரிகளைச் சேர்ந்த மூவாயிரம் மாணவிகளுக்கும் ஆசிரி யைகளுக்கும் கிச்சடி தயாராகிவிட்டது. ருசி யான, போஷாக்கான சிற்றுண்டியை அருந் திப் பசியாறினார்கள்.

திரு டி. ஏ. பை அவர்கள் வந்த விமானம் தாமதமானதே நல்லதாய்ப் போயிற்று என்று நினைத்துக் கொண்டேன். இல்லாத போனால் ஸ்ரீமதி சந்திரகாந்தி அவர்களின் செயலாற் றலையும் கனிந்த இதயத்தையும் கண்டிருக்க முடியாதல்லவா? இன்று நினைத்தாலும் நாவில் நீர் சுரக்கச் செய்கிற கிச்சடியை நான் சுவைத்திருக்கவும் முடியாதல்லவா?

திவான்பகதூர் ரங்கஸ்வாமி நாயுடு அவர் களின் தர்மபத்தினி கிருஷ்ணம்மாளின் பெய ரைத் தாங்கி நிற்கும் இந்தக் கல்லூரியை அவர்களது மருமகள் ஸ்ரீமதி சந்திர காந்தி கண்ணை போல் போற்றிக் காத்து வருகி றார். இன்று தம்முடைய மருமகளை யும் கல்லூரியைக் கச்சிதமாக நிர்வகித்து, எடுத்துக்காட்டான நிலையமாக நடத்துவதில் ஆர்வம் கொள்ளச் செய்து வருகிறார். ஸ்ரீமதி சந்திரகாந்தி இலக்கிய ஆர்வமும் புலமையும் மிக்கவர், சிறந்த பேச்சாளர், கலை உள்ளம் படைத்தவர், பண்பாளர், நிர்வாகத் திறன் நிரம்பப் பெற்றவர். இல்லாமலா நாற்பு ஆலை களைக்கூட நிர்வகித்து வருகிறார்? ''சரிங்க, சரிங்க'' என்று உரையாடலின் போது நிமி ஷத்துக்கு ஒரு தடவை இவர் சொல்லிக் கொண்டிருப்பதைப் பார்த்தால் சுலபமாக இவரைச் சரிக்கட்டிக் கொண்டு போய்விட லாம் என்று தோன்றும். ஆனால் எத்தனை

படங்கள்: இடது: அமைச்சர் திரு டி. ஏ. பை அவர்களை விமான நிலையத்தில் சந்தித்து அழைத்து வருகிறார் திரு வி. ஆர். கோவிந்தராஜுலு.

வலது: மாணவிகளின் தேகப் பயிற்சி; ஸ்ரீமதி சந்திரகாந்தி கோவிந்தராஜுலு.







கண்டிப்பும் கண்காணிப்பும் உடையவர் என்பதைக் கிருஷ்ணம்மாள் கல்லூரிக்குள் நுழையும் யாரும் எளிதில் உணரலாம். மாணவிகளுக்கு மட்டுமின்றி ஆசிரியைகளுக்கும் சீருடை இருப்பது பெரிய விஷயமில்லை. அவற்றை அவர்கள் பயன்படுத்தும்விதம் தான் முக்கியம். அன்று பள்ளி மாணவிகளின் வெள்ளை கான்வாஸ் ஷூக்களைக் குறிப்பாகக் கவனித்தேன். அவை புழுதி படிந்து பழுப்பேறாமல் வெள்ளை வெளேரென்று கண்ணைப் பறித்தன. தலைமைப் பொறுப்பில் உள்ளவர்களிடம் மதிப்பு மிகுந்தால் ஒழிய இதெல்லாம் சொல்லிக் கொடுத்தால்கூட வராது!

தமது கணவர் திரு ஜி. ஆர். கோவிந்தராஜுலு அவர்களுடன் சேர்ந்து ஸ்தாபக தர்மகர்த்தாவாக இருக்கிறார் ஸ்ரீமதி சந்திர காந்தி இக்கல்லூரிக்கு. சுதந்திர சிந்தனையும் கட்டுப்பாட்டு உணர்வும் ஒருங்கே கொண்ட சிறந்த மாணவிகளை உருவாக்கும் கிருஷ்ணம்மாள் கல்லூரி போன்ற கல்வி நிறுவனங்கள் எதிர்கால இந்தியா பற்றிய மனச் சோர்வை நீக்கி நம்பிக்கை கொள்ளச் செய்கின்றன.

திரு டி. ஏ. பை அவர்கள் குறிப்பிட்ட பட்டாளம்—இரண்டாவது அணி—தயாராய் இருக்கிறது!

—வி. ராஜேந்திரன்




# தடையுத்தரவைத் தகர்த்தவர்!

☐ என் தாத்தா பாஷ்யம் அய்யங்கார் உதகமண்டலத்தில் இருக்கும்போது ஒரு சமயம் பித்ரு தினம் வந்தது. அப்போது அவர் சென்னையிலிருந்து பத்து பிராமணர்களை வரவழைத்ததோடு, நாலு ஐந்து காக்கைகளையும் பிடித்துக் கூண்டில் அடைத்து உதகமண்டலத்துக்குக் கொண்டு வரச் செய்து சிராத்தத்தை நடத்தினாராம். உதகமண்டலம் மிகவும் குளிரான பிரதேசமாகையால் அங்கு காக்கைகள் கிடையாது!

☐ ஒரு வருஷம் மார்கழி மாதம் முற்றும் திருவல்லிக்கேணி பார்த்தசாரதி கோயிலைச் சுற்றித் தினமும் 'பிரபாத பேரி' என்ற தேசிய பஜனையை விடியற்காலையில் நடத்தி வந்தோம். திருப்பாவை பஜனைக்குப் பக்தியுடன் செல்வது போன்று எங்கள் பஜனைக்கும் பக்தர்களின் ஆதரவு கிடைத்தது. பஜனையில் கோதைநாயகி அம்மாளின் பஜனை கீதங்களைக் கேட்கக் கூட்டம் எங்களைப் பின்தொடரும். மற்றொரு வருஷம் 'பிரபாதபேரி' மயிலாப்பூர் கபாலீசுவரர் கோயிலைச் சுற்றி ஒரு மாதம் நடத்தி வந்தோம். அப்போது 144 தடை உத்தரவு சென்னையில் பிறப்பிக்கப்பட்டிருந்தது. 144 தடை உத்தரவு என்றால் தெருவில் நான்கு பேர்களுக்கு மேல் சேர்ந்து கூட்டமாகப் பேசக் கூடாது, போகக் கூடாது என்பதுதான் சட்டம். ஆனால் நாங்கள் பஜனை என்ற பாவனையில் பகவான் பெயரைச் சொல்லி அந்தத் தடை உத்தரவைச் செல்லாக் காசாக்கிவிட்டோம்.

☐ என் தாயார் தீபாவளிக்காக சேவாக்கிராமத்தில் இருந்த எனக்குச் சில தின்பண்டங்களை அனுப்பி வைத்தார். அந்தப் பார்சல் பாபு (காந்தி)ஜியின் முன் திறக்கப்பட்டது. அதில் பர்பி, முறுக்கு, சீடைகள் இருந்தன.

"இவற்றைப் பார்த்ததும் உன் நாக்கில் நீர் ஊறுகிறதா? தின்ன அவா உண்டாகிறதா? உன் அம்மா பிரியத்துடன் அனுப்பிய பட்சணமாச்சே?" என்று என்னைக் கேலி செய்தார் பாபுஜி.

'எனக்கு வேண்டாம். நான் தின்ன விரும்பவில்லை' என்றேன். அவர், 'இவைகளை அப்படியே கொண்டு போய் மனோரமாக் குழந்தைகளுக்குக் கொடுத்துவிடு' என்று சொன்னார். பிறகு என்னுடன் வந்த பிரபாவதியை அழைத்து, 'இவன் ஒரு துண்டுகூட ருசி பார்க்கவில்லையா?' என்று கேட்டு, இல்லை என்று தெரிந்தவுடன் 'நீ நாவை அடக்கத் தெரிந்தவன்' என்று பாராட்டினார் காந்திஜி.

☐ கஸ்தூரிபா தலைமையில் திருவல்லிக்கேணி வசந்த உத்தவ பங்களாவில் பெண்களுக்கெனத் தனிக் கூட்டம் ஒன்று நடத்தினோம். அந்தக் கூட்டத்தில் அன்னை கஸ்தூரிபா ஹிந்தியில் ஒரு சிறிய சொற்பொழிவாற்றினார். அங்கு பெருமளவில் பெண்கள் கூட்டம் கூடியிருந்தது. கஸ்தூரிபா அம்மையார் விடுத்த வேண்டுகோளுக்கிணங்கக் கோதைநாயகி அம்மாள், மற்ற அநேகம் பெண்கள் தங்கள் வளையல்கள், மோதிரங்கள் போன்ற நகைகளைக் கழற்றி நிதிக்காகக் கொடுத்தனர். சென்னையிலேயே பொது நலனுக்காகப் பெண்கள் தாங்கள் அணிந்திருந்த நகைகளைக் கழற்றித் தாராளமாகக் கொடுத்தது இதுவே முதல் முறை. காந்திஜி அன்று முதல் தென்னாட்டுப் பெண்களைப் பற்றி மிக கௌரவமாகக் கூறி அவர்களுடைய தியாக சிந்தனையைப் பெரிதும் பாராட்டி வந்தார்.

(சீனிவாச - காந்தி நிலைய வெள்ளி விழா ஆண்டின் போது அதன் ஸ்தாபகர் ஸ்ரீமதி அம்புஜம்மாள் எழுதிய சுய சரிதை, - 'நான் கண்ட பாரதம்' என்ற தலைப்பில் நூலாக வெளி வந்திருக்கிறது. அந்தப் புத்தகத்திலிருந்து சில ரசத் துளிகள். சுதந்திர நன்னாளில் நினைவு கூரத்தக்கவை.)

பிரசுரம்: ஸ்ரீநிவாச காந்தி நிலையம்,-- 96ஏ, மோபரீஸ் ரோட், சென்னை - 600018. விலை 3.50-



# Links the several worlds of women

Every fortnight, Femina reaches out to over two million readers across Asia. It brings to them a discerning, balanced and urbane interpretation of the Indian woman today—and through her, of the country she has helped to change.

Policy-maker, home-keeper or ego-preserver, the Indian woman is, like her counterparts in Asia, destroying old myths and carefully defined roles. She is emerging as the force that motivates much of the change in the sub-continent.

Femina records her life, her changing values, her experiences...every fortnight in colour and black and white.



# femina

**A FORTNIGHTLY FOR EVERY WOMAN**

A TIMES OF INDIA PUBLICATION

தீர்ந்து போன சிகரெட்டுத் துண்டை 'டிரே'யில் போட்டுவிட்டு ஆயாசத்துடன் சோபாவில் சாய்ந்து கொண்டார் ராஜவேலு.

''இங்கே பார்த்தீர்களா, அதிசயத்தை?'' என்று 'ஹிந்து'வைப் புரட்டிக் கொண்டிருந்த மரகதம் அலறினள்.

''விமான விபத்தா? ரயில் விபத்தா?'' அலட்சியமாக அலட்டிக் கொள்ளாமல் வினவினர் ராஜவேலு.

''அதெல்லாம் அதிசயமான விஷயமா, என்ன? வர வர நீங்க பேப்பரைக்கூடச் சரியாகப் பார்க்கிறதில்லே. இதோ இந்தப் பையனின் போட்டோவைப் பாருங்க... இந்த ஆண்டு ஐ. ஏ. எஸ். தேறியிருக்கிற ஒரே தென்னிந்திய மாணவனும்! சத்தியன்னு பேராம்...'' பேப்பருடன் அவர் அருகில் வந்து குறிப்பிட்ட பக்கத்தை அவரிடம் காண்பித்தாள் மரகதம்.

''இது இப்போது அதிசயம்தான்....'' என்றவாறே மனைவி குறிப்பிட்ட இடத்தில் பார்வையைப் படரவிட்டார் ராஜவேலு.

'' நன்ருகப் பாருங்க. ஆச்சரியமாக இல்லே?'' என்று பரபரத்தாள் மரகதம்.

''பார்த்த முகமாக இருக்கிறதே!''

''சரியாப்போச்சு போங்க. இருங்க..... இதோ வருகிறேன்'' என்று உள்ளே ஓடிய மரகதம் சிறிது நேரத்தில் ஒரு போட்டோ ஆல்பத்துடன் திரும்பி வந்தாள்.

''இந்த முகமும், அந்த முகமும் ஒரே மாதிரியாக இல்லே?'' தன் திருமணப் படத்தைச் சுட்டிக்காட்டிக் கேட்டாள்.

'' நீ என்ன சொல்கிருய் மரகதம்? எனக்கு ஒன்றுமே புரியவில்லே....!'' என்று குழம்பினுர் ராஜவேலு.

''இந்தப் பையனின் முகத்தைப் பார்த்தால் நீங்க சின்ன



வயசிலே இருந்தது போலவே இல்லை? புரியவில்லை என்று சொல்கிறீர்களே....! நமக்கு மட்டும் ஒரு மகன் இருந்திருந்தால் அவன் இந்தப் பையன் மாதிரி தான் — அதாவது உங்களைப் போலவேதான் இருப்பான். அதிசய ஒற்றுமை.... பாருங்களேன்!'' பொரிந்து கொட்டினாள் மரகதம்.

'அப்படியும் இருக்குமா ?' ராஜுவேலுவின் மனம் ஆராய்ச்சியில் புகுந்தது — குற்ற உணர்வோடு தான்.

சுமார் இருபத்தி நான்கு வருடங்களுக்கு முன்பு. கபிலாவின் பேரழகு அவரைப் பைத்திய மாக்கியது.

இளமையின் வேகம் அதற்குத் தூபம் போட்டது. 'நாம் ஆண் மகன்தானே ?' என்ற இறுமாப்பு அவரை வழி தவறச் செய்தது.

அது மட்டும்தானா ?

கேட்பாரற்ற சுதந்திரம்.

'உள்ளே வாருங்கள்' என்று அவள் அழைக்கவில்லை.

அவரும் எதிர்பார்க்கவில்லை. பத்திரிகை ஆபீஸ் மூலம் சத்யனின் விலாசத்தை அறிந்துகொண்டு வந்த அவர் உள்ளே வந்து உட்கார்ந்து கொண்டார்.

''ஆச்சரியமாக இருக்கிறது. அப்படித்தானே?'' சிரிக்க முயன்றார்.

''ஆத்திரமாக இருக்கிறது.''

'' ஆத்திரப்படு. ஆத்திரப்படு. அதற்கு உனக்கு உரிமை உண்டு.''

''அநாவசியப் பேச்சுக்கள் எனக்குத் தேவையில்லை. எதற்காக வந்திருக்கிறீர்கள்?''

''சொல்கிறேன், கபிலா! அவசரப்படுகிறாயே......''

# வழக்கமான பாதை

## கே.ஜெயலக்ஷ்மி

பெண்மையின் பேதமை.

உடலைத் தீண்டத் துணிந்தவன் உறவை மெய்ப்பிக்கத் தவறமாட்டான் என்கிற நம்பிக்கை.

நம்பிக்கை இல்லையென்றால் அதுவே இழப்புக்களாகிவிடுமோ என்கிற அச்சம்.

எல்லாவற்றுக்கும் மேலாகப் பாதுகாக்கப்பட வேண்டியதை உணர முடியாத பருவம்.

எல்லாம்தான் ! எல்லாமேதான் !

வேகம் தணிந்ததும் வீரமும் மடிந்தது. கோழையாக ஓடிப் போனான்.

காத்திருந்தான் இன்னொரு கன்னி கையில் மாலையுடன்.

அவனுக்கு உறவு என்கிற உரிமை மட்டும் இல்லை. அள்ள அள்ளக் குறையாத தங்கச் சுரங்கமாகவே அவள் இருந்தாள். இந்தப் பெருமை ஒன்று போதாதா ? உரிமை தானே வருகிறது! வந்தே விட்டது. மரகதத்தைக் கைப் பிடித்தான் ராஜுவேலு. விஷயம் தெரிந்து அவளே நிராகரித்துவிடுவாளோ, மரகதம்? மாட்டவே மாட்டாள். அவன் ஆண் அல்லவா ?

தென்னிந்தியாவுக்கே ஒரு முழுக்குப் போட்டுவிட்டு இருவரும் பம்பாய்க்கு வந்து சேர்ந்து விட்டார்கள். அவன் கபிலாவை மறந்து விட்டான்! அது அவனால் முடிந்தது.

கபிலா !

அவள் அவனை மறக்கவில்லை. அது அவளால் எப்படி முடியும்? தவற்றின் விளைவைச் சுமக்கும் தலைவிதி அவள் தலையில் மட்டும் தானே எழுதியிருக்கிறது! மறக்க நினைத்தாலும் அவளால் முடியாதபடி செய்ய ஓர் உருவம் சத்யனாக — சத்தியமாக நின்று விட்டதே அவளிடம் !




சத்தம் கேட்டு வாயிற் கதவைத் திறந்தாள் கபிலா. திறந்தவளின் எதிரில்.....?

''நீ.... நீங்களா ?''

''நானேதான் கபிலா.''

'' அவசரப்படக் கூடாததற்கு அவசரப் பட்டுவிட்ட குற்ற மனமல்லவா?''

''தயவு செய்து நடந்ததைக் கனவாக எண்ணி மறந்துவிடு, சுசீலா! என்னை மன்னித்து விடம்மா! நம்பியவளைக் கைவிட்ட நான்தான் குற்றவாளி, சுசீலா! அதற்காக நீ எனக்கு என்ன தண்டனை வேண்டுமானாலும் கொடு.'' என்று கெஞ்சினார் ராஜவேலு.

'' எதுவும் நான் அனுபவித்த துன்பங் களுக்கு ஈடாக முடியாது !''

''எல்லாவற்றுக்கும் ஒரு முடிவு கட்டத் தான் சுசீலா நான் இங்கு வந்திருக்கிறேன்.''

''தயவுசெய்து மறுபடியும் என் வாழ்க்கை யில் குறுக்கிடாதீர்கள். போய்விடுங்கள்.''

''அப்படிச் சொல்லாதே, சுசீலா! லட்சம் லட்சமாகக் குவித்து வைத்திருக்கிறேன். ஆனால் மரகதத்தின் வயிறு திறக்கவே இல்லை; உரிமை பாராட்டவில்லை. தர்மமாக யாசிக் கிறேன். சத்யனை நமது பொதுச் சொத் தாக்கு சுசீலா...'' என்று கூறியபடியே எழுந்து அவள் அருகில் வந்தார் ராஜவேலு.

''அப்படியே நில்லுங்கள். காரணத்தோடு தான் வந்திருக்கிறீர்கள்!''

''..............''

'' உங்களுக்குப் பிறகு உங்களுடைய சொத் துக்களை எடுத்துக் கொள்ள ஒரு வாரிசு உங்க ளுக்கு வேண்டும். அவ்வளவுதானே! காதலனு லும் கணவனுலும் கைவிடப்பட்ட பெண் களது குழந்தைகளின் பராமரிப்புக்காக—படிப் புக்காக என்று ஒரு டிரஸ்டை ஏற்படுத்திச் சொத்துக்களை யெல்லாம் அதற்கு எழுதி வைத்துவிடுங்கள். என்னைப் போன்ற எத்தனை எத்தனையோ பிள்ளைகள் உங்களை வாழ்த்திக் கொண்டிருப்பார்கள்'' என்ற குரல் கேட்டுத் திரும்பிப் பார்த்தார் ராஜவேலு.

அங்கே சத்யன் நின்று கொண்டிருந்தான்.

'' அம்மா ! 'இவரை மன்னிப்பதில்லை' என்று என்னிடம் வாக்குக் கொடுத்திருக் கிறீர்கள். ஞாபகம் இருக்கட்டும்.'' சொல்லி விட்டு உள்ளே போய்க் கதவை மூடிக்கொண்டு விட்டான் சத்யன்.

''இதுதான் உன் முடிவா, சுசீலா?'' என்று பரிதாபமாகக் கேட்டார் ராஜவேலு.

''கடவுளே! மரகதத்துக்குக் குழந்தைகள் பிறந்திருந்தால், இப்போது இந்த வேதனை எனக்கு ஏற்பட்டிருக்காது'' என்றுள் சுசீலா.

சாட்டையடி பட்டதுபோல் துடித்துப் போனுர் ராஜவேலு.

'' ஆண்களின் சுயநலத்துக்கு எல்லையே கிடையாதா ?''

''வேண்டாம், சுசீலா ! வேண்டாம் '' என்று திரும்பித் தடுமாற்றத்துடன் நடந் தார் ராஜவேலு.

பதுமையாக நின்றுள் சுசீலா. விழிகள் கண்ணீரை உதிர்த்தன. குலுங்கிக் குலுங்கி அழுதாள்.

கணவரின் அருகில் அமர்ந்து அவருடைய தலையைக் கோதிவிட்டுக் கொண்டிருந்தாள் மரகதம்.

''இன்றைக்குச் சொல்கிற விஷயத்தை அன் றைக்கே என்னிடம் சொல்லியிருந்தால் நானும் உங்களுடன் புறப்பட்டு வந்திருப் பேன்'' என்றுள் மரகதம்.

''வந்து?.....''

''பக்குவமாகப் பேசி அவர்களை நம் முடன் அழைத்து வந்திருப்பேன்.''

''முடியாது, மரகதம் ! அவள் சம்மதித் தாலும் அவளுடைய மகன் நிச்சயம் சம்ம திக்க மாட்டான்.''

''பசு வந்துவிட்டால் கன்று தானே ஓடி வருகிறது.''

''கன்றாக இருந்தால் ஓடி வரும். காளை ஓடி வருமா ?''

'' அத்தனை வைராக்கியமா அவனுக்கு?''

''இருப்பதில் தவறு என்ன? என்ன இருந் தாலும் குற்றவாளி நான்தானே ?''

''அதெப்படி ? குற்றத்தில் இருவருக்கும் சம பங்கு உண்டு.''

''ஐயோ, மரகதம்....!'' தலையில் அடித் துக் கொண்டு, ''எனக்கு மன்னிப்பே கிடை யாதா ?'' என்று அலறினுர்.

அவரைச் சமாதானப்படுத்த முடியாமல் தவித்தாள் மரகதம்.

இருப்புக்கொள்ளாமல் உள்ளுக்கும் வாச லுக்குமாக நடந்து கொண்டிருந்தாள் சுசீலா. அவளைச் சிறிது நேரம் அலைபாய வைத்த பிறகு வாசலில் வாடகைக் கார் வந்துநின்றது.

பரக்கப் பரக்க இறங்கி அவளிடம் ஓடி வந்தான் சத்யன். ''எதற்காக அம்மா எனக்குப் போன் செய்தீர்கள்?''

பேசாமல் அவனிடம் ஒரு தந்தியை நீட்டி ஞள் சுசீலா: 'சிறிது நேரத்துக்கு முன்பு அவர் (ராஜவேலு) இறந்து விட்டார். உங்க ளுக்காக இரண்டு நாட்கள் காத்திருக்கத் தீர்மானித்திருக்கிறேன்' — மரகதம்.

ரோஸ் காகிதம் கசங்கித் தரையில் விழுந்தது.

''இதைக் காட்டவா அழைத்தீர்கள்?'' என்று அலட்சியமாகக் கேட்டான் அவன்.

சிறிது நேரம் அவன் முகத்தையே உற்றுப் பார்த்தாள் சுசீலா. ''அதற்காக மட்டுமல்ல. இரண்டரை மணிக்கு பம்பாய்க்கு விமானம் இருக்கிறதல்லவா? நீ உடனே புறப்படு...''

''அம்மா! விருப்பமில்லாமல் ஒன்றை எப்படி அம்மா செய்ய முடியும்?''

''நம் விருப்பத்துக்கு மீறிய ஒரு சக்தி உலகில் இருக்கத்தான் செய்கிறது. அதை நாம் அலட்சியப்படுத்த முடிவதில்லை. நீ தோன்றக் காரணமாக இருந்தவருக்கு நீ செய்ய வேண்டிய நன்றிக் கடன் சத்யா, இது! அதுவும் உன்னைத் தவிர வேறு யாரும் அவ ருக்கு இல்லாததால் வற்புறுத்துகிறேன்.''

''கடைசியில் நீங்களும் எல்லாப் பெண் களையும்போல்தான் நடந்துகொள்கிறீர்கள்.''

''எத்தகைய புறக்கணிப்பையும் தாங்கிக் கொள்ளும் நெஞ்சுறுதி பெண்களுக்கு உண்டு. ஒரு சிறு புறக்கணிப்பைக்கூடத் தாங்கிக் கொள்ள முடியாத கோழை நெஞ்சம் அப்பா, அவருக்கு. அவருடைய இந்தத் திடீர் மறை வுக்குக் காரணம் எனது புறக்கணிப்பாக இருக்குமோ என்று அஞ்சுகிறேன்......'' சுசீலாவின் குரல் தடுமாறியது. புடவைத் தலைப்பால் கண்களைத் துடைத்துக் கொண் டாள்.

தாயின் முகத்தை உற்று நோக்கிஞன் சத்யன். அங்கே காணப்பட்ட சூனியம் அவனைத் துடிக்க வைத்தது. திறந்திருந்த வாசலை நோக்கி நடந்தான்.




வித்துவான் திரு ஆ. சிதம்பரம் நகராண்மைக் கழக உயர்நிலைப் பள்ளியில் தமிழாசிரியராகப் பணியாற்றுகிறார். தாங்கவொண்ணாத் துன்பங்கள், வேதனைகளிலிருந்து விடுபட வேண்டியே பொடிப் பழக்கத்தையும் சிகரெட் புகைக்கும் பழக்கத்தையும் மேற்கொண்டார். 1938ல் தொடங்கிய சிகரெட் பழக்கத்தை 1968ல் அறவே விட்டுவிட்டார். சிகரெட் பிடிக்கும் பழக்கத்தை அதற்கு முன்னரே விட்டுவிட இவர் முயன்றதுண்டாம். எனினும் பல முறைகள் தோல்வியுற்றிருக்கிறார். சிகரெட்டை விட்டு மறந்திருக்கலாம் என்றுதான் பொடி போடப் பழகினார். ஆனால், நாளடைவில் இரண்டுமே ஏககாலத்தில் உபயோகிக்கும்படியான நிலை ஏற்பட்டு விட்டதாம்! அன்பர்களால் 'ஆசி' என அழைக்கப்படும் வித்துவான் ஆ. சிதம்பரம் கூறுகிறார்:

''நான் பள்ளியில் படிக்கும்போதும் சரி, அதன் பின்னர் திருவையாறு கல்லூரியில் வித்துவான் பட்டத்துக்காக சம்ஸ்கிருதமும் தமிழும் பயின்ற காலையிலும் சரி — இம்மாதிரியான பழக்கங்கள் எதற்கும் நான் அடிமையானதில்லை. ஏன், 1938 வரை நான் சிறிது காலம் நீலகிரியிலேயே ஆசிரியராகப் பணியாற்றியுள்ளேன். அது குளிர் மிகுந்த இடமல்லவா? அங்கு சிகரெட் பழக்கமுள்ள நண்பர்கள் பலர் என்னிடம் பல சந்தர்ப்பங்களில் சிகரெட்டை நீட்டியபொழுதெல்லாம் நாசூக்காக மறுத்திருக்கிறேன். சென்னை போன்ற இடங்களில் மறுப்பது எளிதுதான். நீலகிரி குளிரில் மறுக்க முடியுமா? எனினும் மனத்தைக் கட்டுப்படுத்திக் கொள்ள அப்பொழுது எனக்கு எளிதில் முடிந்தது. நாளடைவில் குடும்பத் தொல்லைகளும், பொருளாதார நெருக்கடியும் பெரிய பிரச்னைகளாகி என்னை வேதனைக்குள்ளாக்கியதன் விளைவாக சிகரெட் பழக்கம் என்னிடம் குடிகொண்டு விட்டது. அப்பொழுதும் நான் பள்ளிக்கூடத்து எல்லைக்குள் சிகரெட் பிடிக்க மாட்டேன். காம்பவுண்டுக்கு வெளியே போய்ப் புகைத்துவிட்டுத் திரும்பி வருவேன். மூக்குப் பொடி விஷயம் அப்படி இல்லை. வகுப்பில் நுழையு முன் பொடியை உறிஞ்சிவிட்டு நுழைவேன். வகுப்பு முடிந்தவுடன் போடுவேன். பொடி போடுவதில் ஒரு பெரிய தொந்தரவு என்ன தெரியுமா? என் வெள்ளைச் சலவைச் சட்டையெல்லாம் பாழாகி விடும். நான் எப்போதுமே வெள்ளைக் கதராடைதான் உடுத்துவேன். உடையெல்லாம் பாழாகி விடுகிறதே என்ற காரணத்தால் பல சமயங்களில் இப்பழக்கத்தையே விட்டுவிட முயன்றதுண்டு. பொடி நிரம்பிய மட்டைகளையும் டப்பிகளையும் பலமுறை தூர வீசி எறிந்திருக்கிறேன். எனினும் அந்தப் பழக்கத்தினை என்னால் அறவே விட்டொழிக்க முடிந்ததில்லை.''

''உங்களுக்குக் குழந்தைகள் எத்தனை?''

''இரு பிள்ளைகள், ஒரு பெண். இரண்டு வருடங்களுக்கு முன்புவரை என் தாயாரும் இருந்தார். தாய்க்கும் என் பிள்ளைகளுக்கும் கூட என்னுடைய இந்தப் பழக்கங்கள் தெரிய வந்தன. அவர்கள் எதிரில் நான் புகைப்பதில்லை; பொடி போடுவதும் இல்லை. இரவில் நீண்ட நேரம் கண் விழித்துப் படிக்கவோ, எழுதவோ நேரிட்டால் பொடிதான் எனக்குக் கைகொடுக்கும். தூக்கத்தை விரட்ட அது பெரிதும் பயன்பட்டது எனக்கு. என் வீட்டாருக்கு மட்டுமின்றி, என் மாணவர்களுக்கும் எனது இந்தப் பழக்கங்கள் பற்றித் தெரியும். நானே இப்பழக்கங்களை வைத்துக்கொண்டு என்னிடம் பயிலும் மாணவர்களைக் கண்டிக்க முடியுமா? பொடி போடும் மாணவனைப் பார்த்து, 'பொடி போடாதே! அது உடலுக்குத் தீங்கு விளைக்கும்!' என்று நான் எச்சரிக்க வேண்டுமானால் அப்பழக்கத்தை நானே கைவிட்டாக வேண்டுமல்லவா? 'உங்கள் உடலுக்கு மட்டும் அது தீமை பயக்காதா, ஐயா?' என்று மாணுக்கன் திருப்பிக் கேட்டுவிட்டால்? சிகரெட்டையும் பொடியையும் நான் துறக்க அதுவும் ஒரு முக்கிய காரணம்.

''இன்னொன்று: என்னிடத்து உண்மையான அக்கறையுள்ள நெருங்கிய நண்பர் ஒருவரது வற்புறுத்தலும் ஒரு முக்கியமான காரணம். என்னை நேரில் சந்திக்கிறபொழுதெல்லாம் இப்பழக்கத்தை விட்டுவிடும்படி



வற்புறுத்துவார், நண்பர். பொடி, சிகரெட் முதலிய புகையிலைப் பழக்கங்கள் புற்று நோய்க்குக் காரணமானவை என்பதை எடுத்துரைத்து என்னைத் திருத்த முயல்வார். அவரது இடையறாத வற்புறுத்தலுக்குச் செவி சாய்க்க வேண்டியது என் கடமை என்பதை நான் உணர்ந்தேன். உணர்ந்திருந்தும் அதனைக் கைவிட முடியாமல் சிரமப்பட்டேன்...''

''பொடிப் பழக்கம் முதலில் உங்களுக்கு எவ்வாறு ஏற்பட்டது? யாராவது கொடுத்தார்களா? நீங்களே கேட்டு வாங்கிப் போட்டுக்கொண்டதா?''

''யாரும் எனக்கு இந்தப் பழக்கத்தினை ஏற்படுத்தியதாகக் கூற முடியாது. நானாகவே தான் கேட்டு வாங்கிப் போட்டுக்கொள்ள ஆரம்பித்தேன். 'நானாகவே ஏற்படுத்திக் கொண்ட இப்பழக்கத்தை ஏன் நானாகவே உதறி எறிய முடியாது?' என்ற வேகம் என்னுள் எழுந்தது. 1968ல் இப்பழக்கங்களிலிருந்து அறவே விடுபட்டு விட்டேன். சினிமாப் படம் பார்க்கும் பைத்தியமும் என்னிடம் முன்பெல்லாம் குடிகொண்டிருந்தது. ஒரு படம் விடாமல் பார்ப்பேன். முதல் நாளே பார்த்துவிடுவேன்! அதையும் இரண்டு வருடங்களாக நிறுத்தி விட்டேன். கடந்த ஐந்து ஆண்டுகளாகப் பொடி, சிகரெட் இவற்றைத் தீண்டாமலே வாழ்ந்து வருகிறேன்.''

''மன உளைச்சல் வேதனை காரணமாக இப்பழக்கத்தினை மேற்கொண்டதாகக் கூறினீர்களே — அவ்வேதனைகளும், அவற்றுக்கான அடிப்படைக் காரணங்களும் இன்று நீங்கி விட்டனவா?''

''அதுதான் இல்லை! மன வேதனை நீங்கியபாடில்லை. வேதனைக்குரிய காரணங்களும் அப்படியேதான் இருக்கின்றன. பொடி, சிகரெட்டினால் மன வேதனைகளைத் தாற்காலிகமாக ஒருவேளை மறக்க முடியலாம். ஆனால் பிரச்னைகளுக்கு முடிவு காண இப்பழக்கங்கள் உதவுமா என்ன? இப்போது பொடி, சிகரெட்டை விட்டு விட்டதில் ஒருவித நிம்மதி இருக்கத்தான் செய்கிறது. இவை இருந்தால் என் உடல் நலம் கெடுமே என்ற மனக் கவலையும் வேறு சேர்ந்து கொள்ளும் அல்லவா? உடல் நலமாகிலும் குன்றாமல் இருக்கிறதே என்ற மனத் திருப்தி இப்போது இருக்கிறது'' என்றார் வித்துவான் 'ஆசி'.

பேட்டி: **'பாணன்'**

## சீதாலக்ஷ்மி சொன்ன சீதா கல்யாணம்



பாரதத்தின் மிகப் புராதனமான கதாகாலக்ஷேபக் கலையில் ஒரு விசேஷம் என்னவென்றால், நாடகம், இசை, அபிநயம் முதலிய பல கலைகளையும் அது தன்னுள் அடக்கிக் கொண்டிருக்கிறது.

சமீப காலத்தில், இந்தக் காலக்ஷேபக் கலை நசித்து விட்டது என்றே கூறலாம். அப்படியே ஒரு சிலர் காலக்ஷேபம் செய்கிறார்கள் என்றாலும் பழைய பாணியிலிருந்து ஓரளவு அவர்கள் விலகி விட்டார்கள்.

ஐந்து வயதுச் சிறுமி ஒருத்தி ''சீதா கல்யாணம்'' காலக்ஷேபம் செய்யப் போகிறாள் என்று அறிந்ததும் எனக்கு அதைக் கேட்க வேண்டும் என்னும் ஆவல் பிறந்தது. அதுவும் சிறுமி சீதாலக்ஷ்மிக்கு இக்கலையில் பயிற்சி அளித்தவர் மதிப்புக்குரிய ஹரிகதா காலக்ஷேப கலாபூஷணம் பன்னிபாய் என்று அறிந்ததும் என் ஆவல் அதிகரித்தது. சென்னை தியாகராயநகரில், ஸ்ருங்கேரி சங்கர மடத்தில் 22-7-73 அன்று சிறுமி சீதாலக்ஷ்மியின் காலக்ஷேப அரங்கேற்றம் நடந்தது.

சிறுமிக்குத் துளியாவது மேடைக் கூச்சம் இருக்க வேண்டுமே! ஊஹூம், கிடையவே கிடையாது!

அதுமட்டுமா? பெண்களும் பெரியவர்களுமாக மேடைக்கு வந்து அவளிடம் பரிசுப் பொருள்களைக் கொடுத்துக் கொண்டே இருந்தனர். இதைக்கண்ட எனக்குச் சிறிது கலக்கம் ஏற்பட்டது. மேற்படி குறுக்கீடுகளினால் குழந்தையின் பேச்சில் தடுமாற்றம் ஏற்பட்டுவிடுமோ என்பதுதான் அதற்குக் காரணம். ஆனால் குழந்தை அதிலும் என்னை ஏமாற்றி விட்டாள்! சிரித்த முகத்துடன் பரிசுப் பொருள்களை வாங்கி வைத்த வண்ணம் கதையைச் சொல்லிக் கொண்டே இருந்தாள். கொஞ்சம் கூடத் தடுமாறவில்லை. பெரியவர்களே மேடையில் பேசும்போது தாங்கள் சொல்லிக் கொண்டிருந்த விஷயத்தை மறந்துவிட்டு, 'நான் இப்பொழுது என்ன சொல்லிக் கொண்டிருந்தேன்?' என்று மேடையின் அருகிலிருப்போரைக் கேட்டுக் குழப்பத்தில் ஆழ்த்தி விடுவதைப் பார்த்திருக்கிறோமே!

கணீரென்ற குரலில், நிறுத்தி, நிதானமாகப் பல சுவையான நிகழ்ச்சிகளுடன், அபிநய பூர்வமாகக் குழந்தை கதை சொன்னது மிகவும் பாராட்டுக்குரியது.

சங்கீத வித்வான் காக்காடு ராமநாராயண அய்யர் அவர்களின் பேத்தியான சீதாலக்ஷ்மிக்கு நல்ல கலைப் பாரம்பரியம் இருக்கிறது. அன்னை அபிராமியின் திருவருளால் சிறுமி சீதாலக்ஷ்மி மேன்மேலும் இத்துறையில் புகழ் பெற வேண்டும். -காந்தன்



"பழைமையான கரகரப்-
பான பற்பொடிகள்
உங்கள் ஈறுகளுக்கும்,
பற்களுக்கும் தீங்கு
இழைக்கக்கூடும்..."

# கால்கேட் பற்பொடி உபயோகித்து உங்கள் பற்களை-யும், ஈறுகளையும் பாதுகாத்துக் கொள்ளுங்கள்! வாய் நாற்றத்தையும் அகற்றுங்கள்!

பழைமையான கரகரப்பான பற்பொடிகள் உங்கள் ஈறுகளைச் சேதப்படுத்தி, பல் எனாமலைச் சிதைக்கக்கூடும். கால்கேட் பற்பொடி மிகவும் மென்மையானது. அது உங்கள் ஈறுகளுக்கு இதமளிக்கும் போதே, அதில் கலந்துள்ள மெருகேற்றும் பொருள் பற்களின் மீது படிந்துள்ள கறைகளைப் போக்கி, பற்களைச் சுத்தமாக வெண்மை பளிச்சிடச் செய்கிறது. கால்கேட்டின் வளமான நுரை பல் இடுக்குகளில் ஊடுருவி வாய்நாற்றம் மற்றும் பற்சிதைவுக்குக் காரணமான கிருமிகளை அகற்றுகிறது. அதனால்தான் கால்கேட் பற்பொடி வாய் நாற்றத்தை உடனே நிறுத்தி, பற்சிதைவையும் எதிர்க்கிறது. அதன் குளுமையான இன்மணத்தையும் நீங்கள் பெரிதும் விரும்புவீர்கள்!

நவீன
பல் பராமரிப்பு முறைகளே **சிக்கனமாக**
இருக்கும்போது பழைமையான
பற்பொடிகளை ஏன் உபயோகிக்க வேண்டும்!

உங்கள் குடும்பத்திற்கு
எகானமி சைஸ் கால்கேட்
பற்பொடியை இன்றே வாங்குங்கள்!
ஒரு டப்பா மாதக்கணக்கில் வரும்!




...பூரணமான பல் பரா
மரிப்பிற்கு விஞ்ஞான
முறையில்
உருவாக்கப்பட்ட
கால்கேட் டூத் ப்ரஷ்
உபயோகியுங்கள்.



TP. G. 19 TM

# ராஜாஜியின் ஜெயிலில்

எங்களுக்கு ஜலம் மொண்டு ஊற்றும் கைதியான நாராயணசாமிக்குக் கடினமான வேலை கொடுத்திருக்கிறார்கள். அவர் சிறைவாசத் தண்டனை அனுபவித்தாய்விட்டது. அவருக்கு அபராதமும் விதித்திருந்தார்கள். அதைக் கொடாததற்காகவே இப்பொழுது சிறையில் இருந்து கொண்டிருக்கிறார்.

இங்கே ஒரு வாலிபக் கைதி இருக்கிறார். அவர் விஷயத்தை ஆராய்ந்தால் சிறை வாசத்தின் பண்பு முழுவதும் விளங்கிவிடும். அவர் இன்னும் ஒன்பது நாட்களில் விடுதலை பெறுகிறார். அவர் சிறைக்கு வந்தது இதுதான் முதல் தடவை. அவர் ஓர் அழகான வேஷ்டியை இரண்டு ரூபாய்க்கு வாங்கினாராம். இவரிடம் கொண்டு வந்து விற்றவன் திருடனாம். போலீஸார் அவனைப் பிடிக்காமல் இவரையே பிடித்துத் தண்டனை பெறச் செய்து விட்டார்கள்.

''சிறையிலிருந்து வெளியே போகிறவர்கள் சீக்கிரமே உள்ளே வந்துவிடுகிறார்களே, இதற்கு என்ன செய்யலாம்?'' என அவர் மிக இரக்கத்துடன் கேட்டார். அவர் வாழ்க்கை அப்படி ஒன்றும் கஷ்டமில்லை. அவருக்குத் தாயார் தகப்பனார் இருக்கிறார்கள். அவர்கள் வாரத்துக்கு நிலம் பயிரிடுகிறார்கள். அதனால் இவரும் அந்த வேலையைச் செய்யலாம். திருடிச் சாப்பிட வேண்டிய அவசியம் அவருக்கு இல்லை.

ஆனால் எல்லோருடைய நிலைமையும் இவருடையதைப் போன்றது அன்று. அவர்கள் கூலி வேலை செய்வார்கள். அது இல்லா விட்டால் திருடுவார்கள். திரும்பத் திரும்பச் சிறைக்கு வருவார்கள். கறுப்புக் குல்லா போட்டுக் கொண்டு கைதி வாழ்வே வாழ ஆரம்பித்து விடுவார்கள்.

கைதிகள் சிலர் சோம்பேறிகளாகவும், வேலை செய்யப் பிரியமில்லாதவர்களாகவும் இருப்பது உண்மைதான். ஆயினும் அநேகர் கஷ்டப்பட்டு வேலை செய்யவும், மனச்சாட்சிப்படி நடக்கவும் கூடியவர்களாக இருக்கிறார்கள். எவ்வித பிழையும் செய்யாமல் நடந்து கொள்கிறார்கள். ஆயினும் யாதொரு பலனுமில்லை. இதே மாதிரி ஊரிலும் போய் நடந்தால் அவர்களுக்கும் அவருடைய குடும்பத்துக்கும் எவ்வளவு நலமாயிருக்கும்! ஆனால் வெளியே சென்றதும் குடிக்க ஆரம்பித்து விடுகிறார்கள். அவ்வளவுதான்; கட்டுப்பாடு அழிந்து போகவே பழையபடி ஆகிவிடுவார்கள்.

இன்று என்னை நிறுத்தார்கள். முன் போலவே இப்போதும் 101 ராத்தல் தான் இருந்தேன்.

## 1922 பிப்ரவரி, 20௳

திங்கட்கிழமை: வழக்கமாகச் சிறை அதிகாரி எங்களைப் பார்வையிடும் நாள் இது. ஆயினும் நாளைக்கு ஒத்திப் போட்டு விட்டார் என்று காலையில் செய்தி வந்தது. நாளைக்கு ஒரு கைதியின் மரண தண்டனையை நிறைவேற்றப் போகிறார்களாம்; அதையும் பார்த்துக் கொண்டு, எங்களையும் ஒரே சமயத்தில் பார்வையிட்டு விடலாம் என்பதே சிறை அதிகாரியின் நோக்கம். மரண தண்டனை காலை ஆறு மணிக்கு நிறைவேறுவதால் அவர் அதிகாலையிலேயே எழுந்து விடவேண்டி யிருக்கும். அப்படி யிருக்கையில் அவர் எதற்காக அடுத்தடுத்து



இரண்டு நாட்கள் அதிகாலையில் எழுந்திருந்து சிரமப்படுத்திக் கொள்ள வேண்டும்?

அப்பாதுரை என்னும் சமையற்காரரை நாளைக்குத் தூக்கிலிடுகிறார்கள். ஒவ்வொரு இரவும் மரண தண்டனை விதிக்கப்பட்டவர்களுக்கும், சிப்பாய்களுக்குமிடையில் நடக்கும் பேச்சு வார்த்தைகள் என் காதுகளில் விழும். எனக்குத் தூக்கம் வரும்வரை அந்தப் பேச்சைக் கேட்டுக் கொண்டிருப்பேன்.

# வளரும் குழந்தைகளுக்கு வாய்ப்பான துணை இன்க்ரிமின்*!




அள்ளித் திரியும் கன்றுப் பருவம்.. ததும்பி வழியும் சக்தி...பொங்கிப் பெருகும் பூரிப்பான ஆரோக்கியம்!

இதுதான் வளரும் பருவம். உடலும் உள்ளமும் ஓங்கி வளரும் இச் சமயத்தில் உங்கள் குழந்தைகளுக்கு இன்க்ரிமின் வழங்கி வாருங்கள். பலனளிக்கும் வைட்டமின்கள், இரும்புச் சத்து, அதி முக்கிய அமினோ அமிலம், வளரும் பருவத்தில் அத்தியாவசியமான இவை அனைத்தும் அடங்கியது இன்க்ரிமின் டானிக்

# இன்க்ரிமின்*

**இன்க்ரிமின் டானிக் வளரும் பருவத்தினருக்கு ஒரு வரப்பிரசாதம்**

டாக்டர்களின் நம்பிக்கைக்குப் பாத்திரமான பெயர் Lederle சயனமைட் இந்தியா லிமிடெட்டின் ஒரு பிரிவு

*அமெரிக்கன் சயனமைட் கம்பெனியின் ரிஜிஸ்டர்டு டிரேட் மார்க்

SISTAS-INC-3068A TAM

# வாடிகன் சென்ற வேங்கடாசலபதி!

திருமலை திருப்பதி தேவஸ்தானத் தகவல் நிலையத்தின் தலைவரும் முன்னாள் மைசூர் மேல்சபை உறுப்பினருமான திருவாளர் வி. ஆர். நாயுடு தலைமையில் திருப்பதிப் பெருமானின் பெருமையை உணர்த்தவும் பிரசாரம் செய்யவும் நால்வர் கொண்ட குழுவினர் சமீபத்தில் ஐரோப்பிய நாடுகளில் சுற்றுப் பயணம் செய்து திரும்பினார்கள். முப்பத்தைந்து நாட்கள் இந்தக் குழுவினர் ரோம், மேற்கு ஜெர்மனி, பிரிட்டன் ஆகிய நாடுகளில் சுற்றுப் பயணம் செய்து திருமால் பெருமையைப் பற்றிப் பிரசாரம் செய்தனர். ஐயாயிரத்துக்கும் மேற்பட்ட படங்கள், விளக்க நூல்கள் விநியோகிக்கப்பட்டன. இந்த நாடுகளில் வசிக்கும் ஏராளமான இந்தியர்களும் இவற்றைப் பெற்றனர்.

ரோம் நாட்டில் வாடிகன் நகரில் போப்பாண்டவரைக் குழுவினர் சந்தித்துப் பெருமான் விக்கிரகத்தைக் கொடுத்துவிட்டு வந்திருக்கின்றனர். அதுபற்றி திரு வி. ஆர். நாயுடு கூறுகிறார்:

"வாடிகன் நகரில் ஹோட்டலில் அறை எடுக்கும் போதே ஹோட்டல் மானேஜரிடம் போப்பாண்டவரைச் சந்திக்க வேண்டும் என்று தெரிவித்தேன். அவர் கையை வேகமாக ஆட்டியபடி ஆகாத காரியம் என்று கூறிவிட்டார். அவரது மொழி புரியாவிடினும் போப்பாண்டவரைச் சந்திப்பது சுலபமானதல்ல என்று தெரிந்து கொண்டேன்.

"தெய்வாதீனமாக அன்றைக்கு இந்தியப் பாதிரி ஒருவரைச் சந்திக்கும் வாய்ப்புக் கிடைத்தது. இவரது பெயர் திரு ஜாகாஸ். ஆராய்ச்சிப் படிப்புக்காக அவர் ரோமுக்கு வந்திருக்கிறார். பெங்களூர் வில்சன் கார்டன் பகுதியைச் சேர்ந்த அவருக்கும் அதே பெங்களூர்வாசிகளான எங்களுக்கும் ஒரு பிடிப்பு உண்டானதில் ஆச்சரியம் ஏதும் இல்லையே! அவரிடம் போப்பாண்டவரைச் சந்திக்கவேண்டும் என்ற எங்களது ஆவல் பற்றிக் கூறினேன். இதுபற்றிக் கவனிப்பதாகக் கூறினார்.

"அன்றிரவு வாடிகன் ஹோட்டல் அறைக்குத் திரும்பியபோது அறைக் கதவில் போப்பாண்டவரைச் சந்திப்பதற்கு உரிய அநுமதிக் கடிதம் செருகப்பட்டிருந்தது.

"இரண்டு நிமிடம் மட்டுமே பேட்டிக்கு அநுமதி கிடைத்திருந்தது. ஆனால் பூஜ்ய போப்பாண்டவர் இருபது நிமிடங்கள் தரிசனம் தந்து மகிழ்வித்தார். வெளி நாடுகளில் சுற்றுப் பயணம் செய்து கொண்டிருந்த பாராளுமன்ற உறுப்பினர் வீரேந்திர பாட்டீலும் இந்தப் பேட்டியின்போது எங்களுடன் இருந்தார்.

"போப்பாண்டவர் வந்ததும் சாஷ்டாங்கமாக அவரது காலில் விழுந்தேன். மூன்று முறை காலைத்தொட்டு வணங்கினேன். போப்பாண்டவரிடம் பயபக்தியுடன் வேங்கடாசலபதி விக்கிரகத்தைக் கொடுத்தோம். இது தவிர திருப்பதி பற்றிய புகைப்பட ஆல்பங்கள், பேழைகள், மைசூர் சந்தன மாலை, மைசூர் பட்டுச் சால்வை ஆகியவை வழங்கித் திரும்பினோம்.

"மனமகிழ்ச்சியுடன் விக்கிரகத்தையும் இதர பொருள்களையும் வாங்கிக்கொண்ட போப்பாண்டவர் மதாபிமானத்துக்கு இணையான மனிதாபிமானமும் மிக்க மகாபுருஷராக எங்களுக்குத் தோன்றினார்.

"பெர்லினில் உள்ள கிருஷ்ணன் கோவிலில் பெருமாள் விக்கிரகம் நிறுவினோம். இதே நகரில் தனியொரு பெருமாள் கோவிலைக் கட்டவும், கமிட்டி அமைத்துள்ளோம்.

"என்னுடன் துணைத் தலைவர் ஜி. கே. லட்சுமி நாராயணனும் வந்திருந்தார்.

"அடுத்து அமெரிக்கா, ஜப்பான் ஆகிய நாடுகளுக்குச் சென்று திருமால் பெருமையை உணர்த்துவோம். இந்தச் சுற்றுப் பயணத்தையும் பிரசாரத் திட்டத்தையும் நாங்கள் எங்களது சொந்தச் செலவிலேயே நடத்தினோம் என்பது குறிப்பிடத் தக்கதாகும்."

பேட்டி: எம். பி. பி. எஸ். மணி.

"வேங்கடாசலபதி விக்ரகத்தைப் பெற்றுக் கொண்ட பூஜ்ய போப்பாண்டவர் மதாபிமானத்துக்கு இணையான மனிதாபிமானமும் மிக்கவராகத் தோன்றினார்."



# படித்துப் பாருங்கள்!

## தீ மதர்ஸ் கால் (ஆங்கிலம்)

இந்நூலாசிரியர் திரு ஆர். பார்த்தசாரதி நிச்சயமாக இன்றைய நோக்கில் ஒரு 'நியூ வேவ்' எழுத்தாளர் அல்ல!

ஆனால் காந்தீயம் என்ற மகா சக்தி ஒரு புத்தம் புதுப் பேரலையாக எழும்பி, பாரத மக்களை ஆட்கொண்ட அதிசயத்தைக் கண்ணுக்கு மெய்யாகக் கண்டதோடு தாமே அந்த அலையில் மூழ்கித் திளைத்தவர். அதன் இதமான வருடலையும், பலமான மோதலையும் முத்துச் சிதறல்கள் காட்டிய வண்ண ஜாலங்களையும் உணர்ந்தவர். எனவே எழுத்தார்வம் மிக்க இவர், காந்தீயக் கருத்துக்களுக்குக் கதை வடிவம் கொடுத்தார். ''அன்னையின் அழைப்பு'' என்ற இந்த நூலுக்குத் தலைப்புத் தரும் கதை, பாரதமாதா தன் மக்களை விடுதலைப் போருக்கு அழைத்ததைக் குறிக்கிறது. ராமு, சுவாமி சாரநாத்தாக உருமாறிப் பாரத மாதாவுக்குப் பூஜை நடத்திச் சுதந்திரப் போராட்டத்துக்கு உதவினாலும் பெற்ற தாயின் குரலையும் அடிக்கடி தமது இதயத்தில் கேட்டு வந்திருக்க வேண்டும். எனவேதான் அவர் தமது இறுதி நெருங்குகிறது என்று உணர்ந்தபோது பெற்றோரிடம் திரும்பினார். அவர்களையும் நாட்டுப் பற்று மிக்கவர்களாக்கிச் சர்க்கா எழுப்பும் இன்னிசையினை ரசிக்கக் கற்றுக் கொடுத்தார்.

திரு ஆர். பார்த்தசாரதி ஆங்கிலத்தில் சில கதைகளையும் தமிழில் ஏராளமாகவும் எழுதியுள்ளார். இந்த ஆங்கில நூலில் அவர் எழுதிய ஆங்கிலக் கதைகள் மட்டுமல்லாது தமிழில் எழுதிய சில கதைகளும் மொழி பெயர்க்கப்பட்டு இடம் பெற்றுள்ளன. பரதன் என்ற புனைபெயரில் அவர் எழுதிய நகைச் சுவைக் கதைகள் பலவற்றுள் மாதிரிக்கு ஒன்றிரண்டு இதில் சேர்க்கப்பட்டுள்ளன. தேசிய நோக்குடைய கதைகள், மனோதத்துவக் கதைகள், நகைச்சுவைக் கதைகள் என்று இத்தொகுப்பில் பல்சுவைக் கதைகளையும் காண்கிறோம்.

ராஜாஜியின் ஆசியுடன் வெளியாகியுள்ள இந்தச் சிறுகதைத் தொகுப்பு குற்றமற்ற, சுவாரசியமான எழுத்துக்கு எடுத்துக்காட்டு.

பிரசுரம்: பாரதீய வித்யா பவன், சௌபாத்தி, பம்பாய். விலை ரூ. 3–00.

## பாரத ரத்னாகரம்

இந்த நூலைத் தொகுத்தளித்திருக்கும் ஸ்ரீ அனந்தானந்தேந்திர சரஸ்வதி ஸ்வாமிகள் காஞ்சி ஆசாரியர்களின் அடியார்கள். 'ஆஞ்சநேய ஸ்வாமிகள்' என்ற பெயரையும் உடைய இப்பெரியவர்கள் பக்தர்உலகுக்கு ஒப்பில்லாத ஒரு பொக்கிஷத்தைத் தந்திருக்கிறார்கள். பஜனை மூலமே பகவானை அடையும் மார்க்கத்தை ஓர் அழகு மரபாக அமைத்துத் தந்த மருதாநல்லூர் சம்பிரதாயத்தைச் சேர்ந்தவர் ஸ்ரீ ஸ்வாமிகள். அந்தப் பக்தி பாங்குற விரிகிறது இந்தப் புத்தகத்திலே. பாரதத்தின் பல மொழிகளைச் சேர்ந்த பக்தசிரோமணிகளின் பாடல்களையெல்லாம் இந்நூலில் ஒருங்கே காண்கிறோம் – தேவநாகரி, தமிழ் ஆகிய இரு லிபிகளிலும். ஆயிரத்துக்கும் மேல் பக்கம் கொண்டது. பரந்து விரிந்த பஜனைப் பிரபஞ்சத்தில் ஒரு மில்லி மீட்டர் கூட விட்டுவைக்கவில்லை என்று தயங்காமல் சொல்லலாம். லாப நோக்கமே இல்லாமல் குறைந்த விலையில் வெகு நேர்த்தியான அமைப்பில் வழங்கப்படும் இந்த நூல் நமக்கு அளிக்கும் ஆன்ம லாபம் அளப்பரியது. கிடைக்குமிடம்: ஸ்ரீ காமகோடி கோசஸ்தானம், 4, பிரான்ஸிஸ் ஜோஸப் தெரு, சென்னை–1; விலை ரூ. 12.00.

# ஒரு லட்சம் குடும்பங்களுக்கு
# நிலமும் வீடும் சொந்தமாகின்றன!
# இன்னும் பத்தே ஆண்டுகளில்!



# வி ஜி பி ஹவுஸிங்

## இதற்கு வழிவகுக்கிறது.

## சொந்தத்தில் ஒரு நிலம்-சொந்தமாக ஒரு வீடு.

வி ஜி பியின் நிகரில்லாத் தவணைமுறைத் திட்டம், சாதாரண மக்களின் வாழ்க்கைத்தரத்தில் மிகச் சிறந்த மாறுதலை ஏற்படுத்தியுள்ளது. பல இலட்சம் குடும்பங்கள் இந்த அருமையான திட்டத்தினால், அதிகமான பயனைப்பெற்றுள்ளன.

இப்பொழுது, 'எல்லோருக்கும் இல்லம்' என்ற, வி ஜி பியின் புதிய திட்டத்தின் மூலம் நிலமும் வீடும் வழங்கப்படுகின்றன.

வழங்கப்படும் வீடுகள்-உறுதியானவை, நியாய விலை கொண்டவை-திட்டமிடப்பட்டு, அழகுடன் நிர்மாணிக்கப்பட்டவை.

சிறிது காலம் தாழ்த்தி நீங்கள் வீடு கட்ட எண்ணியிருப்பினும், இப்பொழுதே மனையை வாங்குங்கள். நிலத்தின் மதிப்பு நாள்தோறும் அதிகமாகி வருவது நினைவிருக்கட்டும். கண்ணுக்கினிய காட்சிகள் அமைந்த வி ஜி பியின் அபிவிருத்திப் பகுதிகளில், எந்த ஒரு பகுதியை யாவது தேர்ந்தெடுங்கள்.

சுத்தமான குடிதண்ணீர், மின்சாரம், போக்குவரத்து போன்ற வசதிகளுடன், பள்ளிகள், பொழுது போக்கு பூங்கா, டெலிபோன் ஆகியன யாவும் அங்கு உண்டு. வி ஜி பியின் அபிவிருத்திப் பகுதிகள், ஆரோக்கியமான வாழ்க்கைக்குத் துணை புரிகின்றன.

மொத்த மதிப்பையும் செலுத்தி மனை வாங்க முடியாவிட்டால், மொத்த மதிப்பில் 10 சதவிகிதத்தை முதல் தவணையாகவும், மீதியுள்ளதை 19 சுலபமான மாதத் தவணைகளிலும் செலுத்துங்கள். எல்லோரும் பயன்பெறும் வகையில் இந்தத் திட்டம் உருவாக்கப்பட்டுள்ளது. நகர வடிவமைப்புத் துறையினரின் அனுமதி பெற்றது.

வி ஜி பியின் எந்த ஒரு அபிவிருத்திப் பகுதியையும் பார்வையிட, காலை 8 மணியிலிருந்து, மாலை 6 மணி-வரை இலவச போக்குவரத்து வசதி உண்டு.




**வி ஜி பி ஹவுஸிங்**
பிரைவேட் லிமிடெட்
விஜிபி சதுக்கம்
சைதாப்பேட்டை சென்னை 15

## எங்கள் வீட்டுப் பிரஸிடெண்ட்!

"பிரசிடெண்ட் ரூலா? அதை நாங்கள் அனுமதித்து விடுவோமா? பார்க்கிறோம், ஒரு கை!" என்று பாய்ந்து எழுந்து சீறும் அரசியல்வாதிகள் அல்ல எங்கள் குடும்பத்து அங்கத்தினர்கள். எங்களுக்குப் பிரசிடெண்ட் 'அலர்ஜி' கிடையாது. அதற்கு மாருக பிரசிடெண்ட்



'அன்பு'தான் உண்டு. காரணம் என் தந்தை திருவாளர் கோவிந்தராஜுலு அவர்கள் தான் எங்கள் வீட்டுப் பிரசிடெண்ட். கலகலப்பான மனிதர். எங்கள் வீட்டு ஹாலில் அவரது குரல் கணீரென்று ஒலித்துக்கொண்டே இருக்கும்.

அந்தக் குரல் ஒலியில் அன்பு இருக்கும். ஆதரவு இருக்கும். கண்டிப்பும் இருக்கும். காத்திரமும் இருக்கும். அவர் ஒரு ஹோல்ஸேல்—கண்ணும்பு மொத்த வியாபாரி. வியாபார அனுபவத்தால் கண்டிப்பையும் கனிவையும்



எந்தெந்த வேளைகளில் எந்தெந்த அளவுடன் கலந்து நடைமுறையில் பூச வேண்டும் என்ற அனுபவம் பெற்றவர். அறுபது வயதைத் தாண்டியவர். வாழ்க்கையில் அடிபட்டுப் பட்டுத் தம் சொந்தக் காலில் நிற்கப் பழகியவர்.

இந்த வியாபாரம் இவருக்குப் பரம்பரைத் தொழில் தான். ஆனாலும் என் பாட்டனார், என் தந்தையை இந்தக் கண்ணாம்பு வியாபாரத்தில் ஈடுபட வேண்டாம் என்று தடுத்தாராம். படித்து இவர் உத்தியோகம் பார்க்க வேண்டும் என்பது அவர் விருப்பம். அந்த விருப்பத்துக்கு இணைந்தாற்போல் இவரும் மெட்ரிகுலேஷன் படிப்பை முடித்துக் கொண்டு டெலிபோன் இலாகாவில் சிறிது காலம் பயிற்சியாளராகக் கூடச் சேர்ந்தார். ஆனால் பரம்பரை வியாபார

# மாரிஸ்காரும் மாப்பிள்ளை யோகமும்

ஆர்வம் இவரை அங்கிருந்து கிளப்பி விட்டு விட்டது. கண்ணாம்புக் காளவாய்களை நேரடியாகக் கவனிக்க வந்து விட்டாராம்!

அன்று அவர் உள்ளத்தில் வியாபித்த ஆர்வம் இன்று அறுபது வயதாகியும், தினசரி அறுபது நாழிகையும் அவரை விட்டு அகலுவதில்லை.

என் தந்தை ஒரு 'மேன் ஆஃப் பிரின்சிபிள்ஸ்'. அவருக்கு மூன்று பெண்கள். நான்தான் கடைக்குட்டி. பெண்கள் எல்லோரும் நிறைய நன்ருகப் படிக்க வேண்டும் என்ற கொள்கை உடையவர். அவர்கள் உத்தியோகம் பார்க்க வேண்டும் என்ற ஆசையால் இல்லை! அவர்கள் படிப்பெல்லாம் அவரவர்களுடைய குழந்தைகளை நல்ல முறையில் உருவாக்க உதவும் என்ற நம்பிக்கையால்தான்.

என் மூத்த சகோதரி இஞ்ஜினியரிங் கல்லூரிக்கு மனுப் போட்டாள். இடமும் கிடைத்தது. இஞ்ஜினியரிங் படிப்புக்குத் தேர்ந்தெடுக்கப்பட்ட ஒரே பெண்மணி என்ற செய்திகூட அந்த ஆண்டில் பத்திரிகையில் வந்தது. அதனால்தானே என்னவோ, என் சகோதரி அந்த வாய்ப்பை விட்டு, மாநிலக் கல்லூரியில் ஹானர்ஸ் வகுப்பில் கணித பாடத்தை எடுத்துக்கொண்டு சேர்ந்தாள். இடையே அவள் திருமணம் நிச்சயமாயிற்று. சம்பந்திகள் வீட்டு விருப்பத்துக்கு இணங்க என் அக்கா படிப்பை இடையில் விட்டு விட்டாள். அவள் கணவர் ஓர் இஞ்ஜினியர்!

அவள் திருமணம் நிச்சயமாகும் முன்பே, திருச்சியில் உள்ள என் அத்தை தன் மகனுக்காக விசேஷமாக என்னைப் பெண் கேட்டார்கள். "அதெல்லாம் முடியாது. உன் வீட்டுக்கு அவன்தான் வேணும்னு என் முதல் இரண்டு பெண்களின் திருமணங்கள் முடியும் வரையில் காத்திரு" என்று சொல்லி விட்டார்!

என் மூத்த சகோதரியின் திருமணம் முடிந்தவுடன், என் அத்தை தம் பழைய வேண்டுகோளைப் புதிய முறையில் விரிவுபடுத்தினர். அதாவது தம் இரண்டு மகன்களுக்கும் தம் அண்ணன் பெண்கள் இருவரையும் கேட்க வந்தார்.

"ஓகோ! இது என்ன மாட்டுச் சந்தையா? மொத்த வியாபாரமாக ஜோடி ஜோடியாகப் பிடிக்க!... ஹூஹூம்! ஒரு சம்பந்தத்துக்கு நான் தயார்! அதோடு நிறுத்திக்க!" என்று ஓங்கி அடித்துச் சொல்லிவிட்டார்.

கடைசி வரை அத்தை வீட்டுச் சம்பந்தம் அமையவில்லை. என் இரண்டாவது அக்கா க்வீன் மேரீஸ் கல்லூரியில் படிக்கும்போது அவள் திருமணம் நடந்தது. அவள் கணவர், பொது சுகாதாரத் துறையில் ஓர் அதிகாரி. நான் பி.எஸ்ஸி. பி. டி. படித்து முடித்ததும் என் திருமணம் நடந்தது. என் கணவர் ஒரு டாக்டர். என் தகப்பனர் ஒரு மாப்பிள்ளை யோகக்காரர்! மணியான மாப்பிள்ளைகளாக அவருக்கு வந்து சேர்ந்தார்கள்!

ஆசைப்பட்டு ஒரு சாமானை வாங்கிவிட்டால், அதன் உபயோகம் குறைந்துவிட்டபிறகு

கூட அதை ஒதுக்க விரும்ப மாட்டார். 1944ம் ஆண்டு மர்பி ரேடியோ இன்றும் எங்கள் வீட்டில் இருக்கிறது. டிரான்ஸிஸ்டர் யுகம் ஆரம்பித்து, வீட்டில் பல 'நடமாடும்' செட்டுகள் வந்தும் கூட, உபயோகப்படாமல் இருக்கும் அந்தப் பழைய 'மெயின்' செட்டுக்கு லைசென்ஸ் கட்டணம் கட்டிக் கொண்டுதான் வருகிறார்.

ரேடியோவைச் சொல்லுவானேன்! ஒரு காரையே அப்படிப் பல காலம் வைத்திருந்தார். 1946ல் ஒரு மாரிஸ் கார் வாங்கினார். அது மிகவும் ராசியானது என்று அவர் அபிப்பிராயம். அப்புறம் வேறு காரும் வாங்கினார். ஆனால் அந்த மாரிஸைத் தள்ளிவிடவில்லை. 1961 லிருந்து 1965 வரை அது ஷெட்டிலேயே நிரந்தரமாக யோகாசனம் செய்து கொண்டிருந்தது. என் திருமணத்துக்குப் பிறகுதான் அந்தக் கார் கை மாறியது.

முதல் இரண்டு மாப்பிள்ளைகளின் திருமண அழைப்புக்கும் அந்தக் கார்தான் உபயோகப்படுத்தப் பட்டதாம். அதே உபயோகம், என் கல்யாணத்துக்கும் தேவை என்ற 'ராசி' நம்பிக்கைக்காகத்தான் அந்தக் காரைப் பல ஆண்டுகள் ஷெட்டில் பத்திரப்படுத்தி வைத்திருக்கிறார் மனிதர்!

அவரிடம் 'உங்கள் பொழுது போக்கு என்ன?' என்றால், 'தொழில்' என்பார். ஒரு நிமிடம் சும்மா இருக்க மாட்டார். அவருடைய வியாபாரக் கடிதப் போக்குவரத்துக்களை யெல்லாம் அவரே பார்த்துக் கொண்டு விடுவார். போட்டி நிறைந்த இந்தக் 'கிளிஞ்சல்' குத்தகை வியாபாரத்தில் எந்த நிமிடமும் உஷாராக இருக்க வேண்டும் என்பது அவர் கருத்து. கிளிஞ்சல் சுண்ணாம்பு, தோல் பதனிடும் துறைக்கும், கோழி உணவுச் சேர்க்கைத் துறைக்கும், மிகவும் தேவையாதலால் போட்டி நிறைய உண்டு.

எங்கள் வீடு எப்போதுமே கலகலவென்று இருக்கும். அவருடைய பேரக் குழந்தைகள், உறவினர் குழந்தைகள் இப்படியாகச் சந்தடி மிருந்த சூழ்நிலை. சில சமயங்களில் 'குழந்தைகள் கோர்ட்' நடத்துவார். புகார் கூறிக் கொண்டு வரும் ஒரு சிறுவனிடம், "நீ என்னடா, பண்ணினே?" என்று மடக்குக் கேள்வி அவர் போடும் தோரணையில் கம்ப்ளெயின்ட் செய்த பையன் 'கம்' என்று வாபஸ் ஆகிவிடுவான்.

"மனுஷன் சோம்பேறித்தனமாக உட்கார்ந்தால், அவன் மனம் வக்கிரமாக, வேண்டாத விதத்தில் யோசனை செய்ய ஆரம்பிக்கும். அந்த யோசனைகள் விளைவாக, ஆத்திரம் கோபம் எல்லாம் தோன்றும். அதற்காகத்தான் நான் சோம்பேறியாக இருப்பவர்களைச் சகித்துக் கொள்ள மாட்டேன்" என்று அடிக்கடி சொல்லுவார் என் அப்பா!



இவருக்கும் கோபம் வரும். ஆனால் தவறு தம்மிடம் என்று உணர்ந்தால் உடனடியாக மனம் விட்டுத் தம் தவற்றை ஒப்புக் கொண்டு விடுவார்.

பேட்டி:

**கோமதி ஸ்வாமிநாதன்**

பிரஸிடெண்ட்:

**எஸ். கோவிந்தராஜுலு**

பேட்டி அளித்தவர்:

அவரது மகள்

**ஸ்ரீமதி சரஸ்வதி நாராயணன்**



உன்னத உணர்வு ஓகோகோ... கன்னத்திலே காற்று மோதிப் படபடக்க... பின்னேக்கி சாலையே நழுவிப் பறக்க... கன்னியரின் கண்களைப் பறிக்குதே உங்கள் வேகம்... வீறுகொண்ட நாகரீகக் களை துள்ளும் விண்ட்டெக்ஸ் ஷர்ட்டிங்.

இன்றைக்கும் நாளைக்கும் என்றென்றைக்கும் ஏற்ற நவநாகரீகத் துணிகள். மிகச் சிறந்த செயற்கை நூலிழைகளால் செய்த பலப் பல வகைகளாம். தரத்திற்கு இதோ சிறப்பான ஒரு உத்தரவாதம்: விண்ட்டெக்ஸ் துணியிலே பழுது ஏதேனும் புலப்படுமானால்... இலவசமாக இன்னொன்றை வழங்குவோம், அத்துடன் தையல் கூலியும் வாபஸ்.




விண்ட்டெக்ஸ் மில்ஸ் பிரை. லிட்., விண்ட்டெக்ஸ் ரோடு, சூரத்.

எல்லா பெரிய ஸ்டோர்களிலும் கிடைக்கிறது.

everest/566d/WM Tm

## "கொலை! கொலை!"

ஆங்கிலப் படமொன்றை ஆதாரமாகக் கொண்டு எடுக்கப்பட்டுள்ளது. ஆனால் காப்பி அடிக்கும் கலைக்கும் ஓர் ஆற்றல் வேண்டும் அல்லவா?

ஆங்கிலப் படத்தைப் பார்த்தாவது ஒரு வெற்றிப் படமாகத் தயாரித்திருக்கலாம். அத்தனைக்குப் பொறுமை இல்லையோ, அல்லது காப்பி அடிக்கும் திறமையைக்கூட இழந்துவிட்டார்களோ? நடிகர்கள் பாவம், என்ன செய்வார்கள்? தங்களுக்குத் தந்த பாகத்தைத் தந்தளவுக்கு நடித்து ஒப்பேற்றியிருக்கிறார்கள். தமது கொலைகார நடிப்பால் டானி சிறந்து விளங்குகிறார். அவரை, 'சாடிஸ்ட்'டாகச் சுற்றி வருவதால் ஆனந்தாக வரும் மகேந்திர சந்து படம் முழுவதும் விரைவி மட்டும் நிற்கிறார்.





# கூன் கூன்

சிறு பையன் ஒருவன். ராகவ் என்று பெயர். மாற்றுத் தாயின் பாசமற்ற வறட்டுத் தனத்தால் உள்ளத்தில் வெறுப்பை வளர்த்துக் கொள்கிறான். தந்தை டாக்டரிடம் அழைத்துச் செல்கிறார். மனத் தத்துவ சிகிச்சையால் அவனைத் திருத்திவிட முடியும் என்று முடிவுக்கு வருவதற்குள்ளாக அவன் கம்பி நீட்டிவிடுகிறான். மனத் தத்துவத்துக்கு முக்கியத்துவம் கொடுத்து அழுத்தமான ஒரு படமாக உருவாகும் என்று நினைக்கும் வேளையிலே......

'பட், பட்' என்று சொல்லிச் சொல்லிக் கொலைபுரிகிறான் ராகவ். துப்பாக்கி அவன் சொன்னபடி கேட்கிறது. அவனைப் பிடித்தும் பிடிக்க முடியாமல் கதை வளருகிறது. கொலையை மட்டுமே காட்டுவது என்று உறுதிபூண்டு விட்டார்களோ? அவனுக்குத் துப்பாக்கி கிடைத்த விதத்தையோ, போலீசாரின் கையில் அகப்படாமல் தப்பும் அதிசயத்தையோ பற்றிச் சிந்தியாமல் படம் ஓடுகிறது!

கடைசியில் குழந்தைகளின் பள்ளி பஸ்ஸைக் கடத்திச் சென்று, உயிருக்குப் போராடும் இடத்தில் அமர்க்களமாகப் படம் பிடித்து, பார்ப்பவர்களுக்கு விறுவிறுப்பு ஊட்டுகிறார்கள். பஸ்ஸில் உள்ள பச்சிளம் பாலகர்களின் நடிப்பு பிரமாதம்! மகிழ்ச்சி, பயம், அழுகை ஆகிய பாவங்களை அற்புதமாகக் காட்டிப் படத்துக்கு உயிர் ஊட்டுகின்றனர். கதைப்படி கன்னியர்களும் காதலும் தேவை இல்லை என்றாலும், இந்தியத் திரைப்படத்துக்கு அத்தியாவசியத் தேவை என்பதை யாரே மறுக்க முடியும்? அத்தேவையை ரேகா, பத்மா கன்னா, ஹெலன் நிறைவேற்றியிருக்கிறார்கள்! ஆயினும் போங்கள்! தலைப்பு மட்டும் கொலையல்ல; படமே கொலை!

— ரா. வீ.

---



## நியூவேவ் கோரிக்கை!

காதலன்: நீ என்னைக் கல்யாணம் பண்ணிக் கொள்வதானால் நீ இப்பொழுது பார்த்துக் கொண்டிருக்கும் வேலையை விட்டுவிட வேண்டும்.

காதலி: சரி. அப்படியே விட்டுவிட்டு வீட்டில் தங்குகிறேன்.

காதலன்: வேண்டாம், வீட்டில் தங்கக் கூடாது. இப்பொழுது உள்ளதைவிட இன்னும் அதிக சம்பளம் உள்ள வேலையைத் தேட வேண்டும்.

- நாடோடி



# பல்லவன் போக்குவரத்துக் கழகம்

(தமிழக அரசின் ஓர் நிறுவனம்)

பல்லவன் போக்குவரத்துக் கழகம் பயணிகளின் வசதியை முன்னிட்டு ஒவ்வொரு ஞாயிறுதோறும் நகரில் பல்வேறு இடங்களில் இருந்து திருவேற்காட்டிற்கு கீழ்க்கண்ட நேரப்படி தனிப்பேருந்துகளை இயக்குகிறது.

---

| ஹாமில்டன் பாலம் - திருவேற்காடு | | திருவேற்காடு - ஹாமில்டன் பாலம் | |
|---|---|---|---|
| (முதல் வண்டி) | 06.00 | (முதல் வண்டி) | 07.20 |
| (கடைசி வண்டி) | 20.35 | (கடைசி வண்டி) | 21.50 |

(கட்டணம் 70 பைசா ; பயண நேரம் ; 65 நிமிடம்)

| வில்லிவாக்கம் - திருவேற்காடு | | திருவேற்காடு - வில்லிவாக்கம் | |
|---|---|---|---|
| (முதல் வண்டி) | 06.00 | (முதல் வண்டி) | 07.20 |
| (கடைசி வண்டி) | 20.40 | (கடைசி வண்டி) | 22.00 |

(கட்டணம் 65 பைசா : பயண நேரம் 65 நிமிடம்)

| பெரம்பூர் - திருவேற்காடு | | திருவேற்காடு - பெரம்பூர் | |
|---|---|---|---|
| (முதல் வண்டி) | 05.45 | (முதல் வண்டி) | 07.05 |
| (கடைசி வண்டி) | 20.25 | (கடைசி வண்டி) | 21.45 |

(கட்டணம் 70 பைசா : பயண நேரம் 65 நிமிடம்)

| வள்ளலார் நகர் - திருவேற்காடு | | திருவேற்காடு - வள்ளலார் நகர் | |
|---|---|---|---|
| (முதல் வண்டி) | 05.10 | (முதல் வண்டி) | 06.30 |
| (கடைசி வண்டி) | 19.35 | (கடைசி வண்டி) | 20.50 |

(கட்டணம் 65 பைசா : பயண நேரம் 65 நிமிடம்)

| மந்தவெளி - திருவேற்காடு | | திருவேற்காடு - மந்தவெளி | |
|---|---|---|---|
| (முதல் வண்டி) | 05.50 | (முதல் வண்டி) | 07.10 |
| (கடைசி வண்டி) | 20.15 | (கடைசி வண்டி) | 21.30 |

(கட்டணம் 70 பைசா : பயண நேரம் 65 நிமிடம்)

| சைதை - திருவேற்காடு | | திருவேற்காடு - சைதை | |
|---|---|---|---|
| (முதல் வண்டி) | 05.45 | (முதல் வண்டி) | 07.00 |
| (கடைசி வண்டி) | 20.40 | (கடைசி வண்டி) | 21.55 |

(கட்டணம் 75 பைசா : பயண நேரம் 65 நிமிடம்)

| திருவல்லிக்கேணி - திருவேற்காடு | | திருவேற்காடு - திருவல்லிக்கேணி | |
|---|---|---|---|
| (முதல் வண்டி) | 05.35 | (முதல் வண்டி) | 06.50 |
| (கடைசி வண்டி) | 20.10 | (கடைசி வண்டி) | 21.30 |

(கட்டணம் 65 பைசா : பயண நேரம் 65 நிமிடம்)

| சென்னை (பிராட்வே) - திருவேற்காடு | | திருவேற்காடு - சென்னை (பிராட்வே) | |
|---|---|---|---|
| (முதல் வண்டி) | 06.00 | (முதல் வண்டி) | 07.00 |
| (கடைசி வண்டி) | 19.35 | (கடைசி வண்டி) | 20.40 |

(கட்டணம் 60 பைசா : பயண நேரம் 50 நிமிடம்)

| வடபழனி - திருவேற்காடு | | திருவேற்காடு - வடபழனி | |
|---|---|---|---|
| (முதல் வண்டி) | 06.10 | (முதல் வண்டி) | 07.30 |
| (கடைசி வண்டி) | 20.35 | (கடைசி வண்டி) | 21.50 |

(கட்டணம் 70 பைசா : பயண நேரம் 65 நிமிடம்)

**இர. தில்லைநாயகம்**
*நிர்வாக இயக்குநர்*

# சிவகாமியின் சபதம்

ஐந்தாம் அத்தியாயம்

## செல்லப் பிள்ளை

பொன்னி நதி தன் பல்லாயிரம் கைகளாலும் வளப்படுத்திப் பொன் கொழிக்கச் செய்யும் கீழைச் சோழ நாட்டில் செங்காட்டாங்குடி என்ற இராமம் செழித்து விளங்கிற்று. இந்தக் இராமத்தில் மாமாத்திரர் என்ற பட்டம் பெற்ற பழங்குடியில் பிறந்த பிள்ளை பரஞ்சோதி. சோழநாடு முழுதும் உறையூர்ச் சோழ மன்னர்களின் ஆட்சியின் கீழ் இருந்த பழைய காலத்தில் பரஞ்சோதியின் மூதாதைகள், இராஜ சேவையில் ஈடுபட்டுப் படைத் தலைவர்களாயிருந்தார்கள். சோழ வம்சம் பழம் பெருமை இழந்து, பல்லவர் ஆட்சி ஓங்கியபோது மாமாத்திரர் குலமும் அதன் சிறப்பை இழந்தது. சென்ற சில தலைமுறைகளாக மாமாத்திரர் போர்த் தொழிலையும் எல்லைக் காவல் தொழிலையும் கைவிட்டு விவசாயத் தொழிலை மேற்கொண்டிருந்தார்கள்.

இத்தகைய குலத்திலே பிறந்த பரஞ்சோதி குழந்தைப் பிராயத்திலேயே தந்தையை இழந்து, தாயாரின் செல்லப் பிள்ளையாக வளர்ந்து வந்தான். 'முரடன்', 'பொல்லாதவன்' என்று அக்கம் பக்கங்களில் பெயர் வாங்கினான். சண்டை என்பது அவனுக்குச் சர்க்கரையும் பாலுமாக இருந்தது. போர்த் தொழிலுக்குரிய சாதனங்களில் இயற்கையாக அவன் புத்தி சென்றது.

அமரர்

**கல்கி**





வீராதி வீரர்கள் என்று புகழ் பெற்ற அவனுடைய மூதாதைகளின் வீர இரத்தம் பரஞ்சோதியின் தேகத்தில் அலைமோதிக் கொண்டு ஓடியது. கழி விளையாட்டு, கத்தி விளையாட்டு, மல் யுத்தம், வேல் எறிதல் ஆகியவற்றில் அவன் அதி விரைவாகத் தேர்ச்சி பெற்றான்.

பரஞ்சோதியின் தாயார் வடிவழகி அம்மை தன் ஏக புத்திரனிடம் உயிரையே வைத்திருந்தாள். ஆனாலும், பரஞ்சோதியின் முரட்டுக் காரியங்கள் அவளுக்குப் பெரிதும் கவலையை அளித்தன. அந்த மூதாட்டி சிவபக்திச் செல்வத்திலும் கலைச் செல்வத்திலும் சிறந்த குடும்பத்திலே பிறந்தவள். அவளுடைய தமையனார் திருவெண்காட்டுப் பதியில் புகழுடன் வசித்த மருத்துவர். சிவநேசச் செல்வர். தெய்வத் தமிழ் மொழியை நன்கு பயின்றிருந்ததோடு, வடமொழியிலும் அவர் புலமை பெற்று விளங்கினார். வைத்தியக் கலையில் தேர்ச்சி பெற்று நோய் தீர்ப்பதில் வல்லவராய் இருந்தார்.

அந்தச் சிவபக்தரின் மூத்த பெண்ணுக்கு உமையாள் என்று பெயர். அழகிலும் குணத்திலும் அவள் இணையற்று விளங்கியது போலக் கல்வியிலும் சிவபக்தியிலும் சிறந்து விளங்கினாள்.

இந்தத்திருவெண்காட்டுப்பெண்ணைத் தன் மகனுக்கு மணம் முடித்து வைக்க வேண்டும் என்று பரஞ்சோதியின் அன்னை அந்தரங்கத்தில் ஆசை கொண்டிருந்தாள். ஆனால், அது நிறைவேறுமா என்ற சந்தேகமும் கவலையும் அவளுடைய மனத்தில் குடிகொண்டிருந்தன. பல துறைகளிலும் புலமை மிகுந்த அவளுடைய தமையனார் இந்த முரட்டுப் பிள்ளைக்குத் தம் அருமைப் பெண்ணைக் கொடுப்பாரா?

பரஞ்சோதியைக் கல்வி கேள்விகளில் வல்லவனாக்க அவனுடைய தாயார் எவ்வளவோ பிரயத்தனம் செய்தாள். ஆனால், பரஞ்சோதிக்குக் கல்வி கற்பிக்க முயன்ற அண்ணாவிகள் எல்லாரும் தோல்வியே அடைந்தனர். அவர்களில் ஒருவராவது அதிக காலம் நீடித்து அந்த முயற்சியைச் செய்யவில்லை. ஒவ்வொருவரும் சில காலம் முயன்று பார்த்த பிறகு, அந்த மூதாட்டியிடம் வந்து, "அம்மா! உங்கள் புதல்வன் வெகு புத்திசாலி. ஏக சந்தக்கிராஹி என்றே சொல்லலாம். எந்த விஷயத்தையும் கவனம் செலுத்தி ஒரு தடவை கேட்டால் போதும்; உடனே தெரிந்துகொள்ளுகிறான். ஆனால், அந்த ஒரு தடவை அவனைக் கவனித்துக் கேட்கும்படி செய்வதற்குள்ளே எங்கள் பிராணன் போய் விடுகிறது. அவனுக்குப் பாடம் சொல்லிக் கொடுக்கும் சக்தி எங்களுக்கு இல்லை" என்று சொல்லி விட்டுப் போனார்கள்.

இரண்டொரு அண்ணாவிமார் பரஞ்சோதி விஷயத்தில் தண்ட உபாயத்தைக் கையாளப் பார்த்தார்கள். அதன் பயனாக, அவர்கள் அவனுடைய தாயாரிடம் சொல்லிக் கொள்ளாமலே ஊரை விட்டுப் போகும்படி நேர்ந்துவிட்டது!

இதனாலெல்லாம் பரஞ்சோதியின் தாய் மிகவும் கவலை கொண்டிருந்தாள். ஒரு வருஷம் பொங்கல் பண்டிகைக்காகப் பரஞ்சோதியும் வடிவழகி அம்மையும் திருவெண்காட்டுக்குப் போயிருந்தார்கள். அங்கே பரஞ்சோதி உமையாளைப் பார்த்தான். உமையாளின் கல்யாணத்தைப் பற்றிப் பேச்சு நடப்பதைக் கேட்டான். தன் மாமனும் தாயாரும் தன்னைப் பற்றி வருத்தத்துடனும், கவலையுடனும் பேசிக் கொண்டிருந்ததும் அவன் காதில் விழுந்தது. எல்லாவற்றையும் சேர்த்து யோசித்து, நிலைமையை ஒருவாறு தெரிந்து கொண்டான்.

அவர்கள் திருவெண்காட்டிலிருந்து திரும்பித் திருச்செங்காட்டாங்குடிக்கு வந்த பிறகு, ஒரு நாள் பரஞ்சோதியின் தாயார் தரையில் படுத்த வண்ணம் கண்ணீர் உகுத்துக் கொண்டிருந்தாள். எங்கேயோ வெளியே போய்விட்டுவந்த பரஞ்சோதி இதைப் பார்த்து, தாயாரின் அருகில் வந்து உட்கார்ந்து கொண்டான். அன்னை எதற்காக அழுகிறாள் என்று அவன் கேட்கவில்லை. அவளுக்குச் சமாதானமும் சொல்லவில்லை.

"அம்மா! நான் ஒன்று சொல்கிறேன்; நீ அதற்குத் தடை சொல்லக் கூடாது" என்றான்.

அன்னை கண்ணீரைத் துடைத்துக் கொண்டு, "என்னடா, என் கண்ணே!" என்றாள்.

"நான் காஞ்சிமா நகருக்குப் போகப் போகிறேன்" என்று பரஞ்சோதி சொன்னதும், திடுக்கிட்டு எழுந்து உட்கார்ந்தாள்.

"எதற்காக?" என்று கேட்டாள்.

"கல்வி கற்பதற்காகத்தான் அம்மா! இத்தனை நாட்களும் நான் கல்வி கற்காமல் வாணாளை வீணாளாகக் கழித்து விட்டதை நினைத்தால் வருத்தமாக இருக்கிறது!" என்றான் பரஞ்சோதி.

தாயாருக்கு ஆனந்தக் கண்ணீரும் துக்கக் கண்ணீரும் சேர்ந்தாற்போல் கண்களில் துளித்தன.

"கல்வி கற்பதற்குக் காஞ்சிக்குப் போவானேன்? இங்கேயே படிக்கக் கூடாதா, குழந்தாய்?" என்றாள்.

''இந்த ஊரில் இருக்கும் வரையில் எனக்குப் படிப்பு வராது. நல்ல கல்விப் பயிற்சி பெற வேண்டுமென்றால் காஞ்சிமா நகருக்குத்தான் போக வேண்டும் என்று எல்லோரும் சொல்கிறார்கள். இந்தப் பரத கண்டத்திலேயே காஞ்சியில் உள்ளவை போன்ற கல்லூரிகளும் கலைக் கூடங்களும் வேறெங்கும் இல்லையாம். நான் எல்லாம் விசாரித்துத் தெரிந்துகொண்டுவிட்டேன், அம்மா!'' என்றான் பரஞ்சோதி.



பரஞ்சோதி கூறியது உண்மைதான். அந்த நாளில் காஞ்சிமா நகரமானது கலைமகளுக்கு உறைவிடமாயிருந்தது. வடமொழிக் கல்வி அளித்த வேத கடிகைகளும், தமிழ்க் கல்வி பயில்வித்த திருமடங்களும், பௌத்தர்களின் மத போதனைக் கல்லூரிகளும், சமண சமயப் பள்ளிகளும் காஞ்சியில் நிறைந்திருந்தன. இன்னும் சித்திரம், சிற்பம், சங்கீதம் ஆகிய அருங் கலைகளைப் பயில்வதற்குச் சிறந்த கலைக் கழகங்களும் இருந்தன.

இவற்றை யெல்லாம் விடக் காஞ்சி மாநகருக்குப் பெருஞ் சிறப்பு அளித்துத் தமிழகமெங்கும் பெருங் கிளர்ச்சி உண்டாக்கிய சம்பவம் ஒன்று சில காலத்துக்கு முன்பு நிகழ்ந்திருந்தது. அந்தச் சம்பவம் மகா வீரரும் மகா புத்திமானும் சகல கலா வல்லவருமான மகேந்திர வர்ம சக்கரவர்த்தி, திருநாவுக்கரசர் மகிமையினால் சமண மதத்தைத் துறந்து விட்டுச் சிவநேசச் செல்வரானதுதான்.

மருள்நீக்கியார் என்னும் இயற்பெயர் கொண்ட நாவுக்கரசர் சில காலம் தர்மசேனர் என்ற பெயருடன் சமண சமயப் போதகர்களில் புகழ் பெற்றவராய் விளங்கினார். பின்னர், அவருடைய சகோதரி திலகவதியாரின் சிவபக்தி மகிமை காரணமாக அவர் சமண மதத்தைத் துறந்து சிவனடியாரானார். அதுமுதல் தேனினும் இனிய தமிழ் மொழியில் சிவ பக்தி ததும்பும் பண்களையும் தாண்டகங்களையும் அமுத வெள்ளமாகப் பொழிந்து வந்தார். அந்தத் தெய்விகப் பாடல்களின் மகிமையில் ஈடுபட்ட மகேந்திர சக்கரவர்த்தியானவர், ''நான் நாட்டுக்கரசன்; தாங்கள் நாவுக்கரசர்'' என்று மருள்நீக்கியாரைப் போற்றியதோடு, சமண மதத்தையே துறந்து சிவநேசராகி விட்டார். இந்த வரலாறு தமிழகமெங்கும் பரவியிருந்தது. மேற்கூறிய அதிசயங்களைப் பற்றியே அந்தக் காலத்தில் எங்கெங்கும் வியப்புடன் ஜனங்கள் பேசிக் கொண்டிருந்தார்கள். மகேந்திர சக்கரவர்த்தியினது வேண்டுகோளின் பேரில் நாவுக்கரசர் காஞ்சியில் திருமடம் ஸ்தாபித்திருக்கிறார் என்றும், அந்த மடத்தில் தெய்வத் தமிழ்

மொழியும், தெய்விக இசைப் பாடல்களும் கற்பிக்கப்படுகின்றன என்றும் நாடெங்கும் பிரசித்தமாகி யிருந்தது. இந்தச் செய்திகள் எல்லாம் பரஞ்சோதியின் காதிலும் விழுந்திருந்தபடியால்தான், ''கல்வி கற்கக் காஞ்சிக்குப் போகிறேன்'' என்று அவன் தாயாரிடம் கூறினான்.

ஏக புதல்வனைப் பிரிந்திருக்க வேண்டுமென்பதை நினைத்து வடிவழகி அம்மை பெரும் வேதனையை அடைந்த் போதிலும், ''கல்வி கற்கப் போகிறேன்'' என்று பரஞ்சோதி கூறியது அவளுக்கு ஒரு பக்கத்தில் அளவில்லாத மகிழ்ச்சியையும் அளித்தது. தாயாரின் சம்மதத்தைத் தெரிந்து கொண்டதும் பரஞ்சோதி, ''அம்மா! நீ மாமாவிடம் சொல்லி நான் கல்வி கற்றுத் திரும்பி வரும்வரையில் உமையாளுக்குக் கல்யாணம் செய்யாமல் பார்த்துக் கொள்ள வேண்டும்'' என்று கூறியபோது, மகனுடைய மனநிலையை அறிந்துகொண்டு அன்னை மீண்டும் ஆனந்தக் கண்ணீர் வடித்தாள்.

பரஞ்சோதியின் தீர்மானத்தை அறிந்து அவனுடைய மாமனும் அளவற்ற மகிழ்ச்சி யடைந்தார். அந்தச் சிவபக்தர் திருநாவுக்கரசரைத் தரிசித்து அவருடன் நட்புரிமை பூண்டவராதலால் நாவுக்கரசருக்கு ஓலை எழுதித் தருவதாகச் சொன்னார். தமிழ்க் கல்வியோடு ஏதேனும் ஒரு கலையும் அவன் கற்று வர வேண்டும் என்றும் இதன் பொருட்டுத் தம்முடைய பழைய சிநேகிதரான ஆயனருக்கு ஓலை தருவதாகவும் கூறினார். பரஞ்சோதியின் மனநிலையை அறிந்து கொண்டு அவன் கல்வி பயின்று திரும்பியதும் உமையாளை அவனுக்கே மணம் செய்து தருவதாகவும் உறுதி கூறினார்.

நல்ல நாள், நல்ல வேளையில் பரஞ்சோதி அன்னையிடமும் மாமனிடமும் ஆசி பெற்று, மற்ற எல்லாரிடமும் விடைபெற்றுக் கொண்டு 'காஞ்சிமா நகருக்குப் புறப்பட்டான்.

புறப்படும்போது, கடைசியாக அவனுடைய மாமன் கூறிய புத்திமதி என்னவென்றால், ''அப்பா, பரஞ்சோதி! தூர வழி போகும்போது கையில் வேலுடன் நீ புறப்படுவது நியாயம்தான். ஆனால், வழிப் பிரயாணத்துக்கு மட்டும் வேலைத் துணையாக வைத்துக்கொள். காஞ்சிமா நகரை அடைந்ததும் வேலைத் தலையைச் சுற்றி வீசி எறிந்துவிடு. அப்புறம் கல்வி கற்பதிலேயே முழுக் கவனத்தையும் செலுத்து'' என்பதுதான்.

### ஆறாம் அத்தியாயம்

## மர்மக் கயிறு

சிறைக் கூடத்தின் இருள் சூழ்ந்த அறைக்குள்ளே கோரைப் பாயில் தன்னந் தனியாகப் படுத்திருந்த பரஞ்சோதிக்கு மேற்கூறிய மாமனுடைய புத்திமதி நினைவுக்கு வந்தது. காஞ்சிமாநகரை அடைந்ததும் மாமனுடைய புத்திமதியின் பிரகாரம் அவன் வேலை வீசி எறியத்தான் செய்தான்! ஆனால், அந்தப் பொல்லாத வேல் மதங்கொண்ட யானையின் மீது விழுந்து தொலைந்தது! அதனுடைய பலன்தான் தன்னைச் சிறையிலே கொண்டு வந்து சேர்த்தது என்பதை எண்ணியபோது பரஞ்சோதிக்குச் சிரிப்பு வந்தது.

காஞ்சிமா நகர் சேர்ந்த முதல் நாள் இரவைத் தான் சிறைச்சாலையில் கழிக்க



வேண்டி யிருந்தது என்பதை அவனுடைய தாயும் மாமனும் அறிந்தால் என்ன நினைப்பார்கள்? தான் காஞ்சிக்குப் புறப்பட்ட சமயத்தில், வீட்டுச் சுவருக்கு அப்பால் தனியாக நின்று கனிவும், கண்ணீரும் ததும்பிய கண்களினால் விடை கொடுத்த உமையாளுக்குத்தான் என்னமா யிருக்கும்?

காஞ்சியில் தமிழ்க் கல்வியும் சிற்பக் கலையும் கற்றுக் கொண்டு திரும்பி ஊருக்குப் போனதும் இந்த முதல் நாள் சம்பவத்தைச் சொன்னால், அவர்கள் ஒரு வேளை நம்ப மறுத்தாலும் மறுக்கலாம். இன்று மத்தியானம் தன்னிடமே யாராவது இப்படியெல்லாம் நடக்கும் என்று சொல்லியிருந்தால் நம்பியிருக்க முடியுமா?

சட்டென்று பரஞ்சோதிக்கு ஒரு விஷயம் நினைவு வந்தது. அந்தப் புத்த சந்தி

யாசி என்ன சொன்னார்? 'இன்று இரவு உனக்கு ஒரு கஷ்டம் வரும்' என்று சொன்னாரல்லவா? அது உண்மையாகி விட்டதே! உண்மையிலேயே அவர் முக்காலமும் உணர்ந்த முனிவரா?

அன்று நண்பகலில் அந்தப் புத்த சந்நியாசியை அவன் சந்தித்த சம்பவத்தை நினைத்துக் கொண்டு பரஞ்சோதி தனக்குத் தானே நகைத்துக் கொண்டான். அந்தச் சம்பவம் பின்வருமாறு:

**கா**லையெல்லாம் வழிநடந்த பிறகு, காஞ்சி நகர் இன்னும் ஒரு காத தூரந்தான் இருக்கிறது என்று பரஞ்சோதி தெரிந்து கொண்டு சற்று இளைப்பாறிச் செல்லலாம் என்று சாலை ஓரத்தில் ஒரு



மரத்தடியில் படுத்துக் கொண்டான். அவனுடைய தலைமாட்டில் மூட்டையும் அவன் பக்கத்தில் வேலாயுதமும் கிடந்தன.

சிறிது நேரத்துக்கெல்லாம் சாலையோடு ஒரு புத்த சந்நியாசி வருவதை அவன் பார்த்தான். புத்தர்கள் அல்லது சமணர்களுடைய கூட்டுறவு கூடாதென்றும், அவர்களைக் கண்டால் தூர விலகிப் போய்விட வேண்டும் என்றும் அவனுடைய மாமனும் அன்னையும் மிகவும் வற்புறுத்திக் கூறியிருந்தார்கள்.

எனவே, தூரத்தில் புத்த சந்நியாசியைக் கண்டதும் பரஞ்சோதி கண்களை மூடிக் கொண்டான். அவர் தன்னைத் தாண்டிச் சாலையோடு தொலை தூரம் போகும் வரையில் தூங்குவது போல் பாசாங்கு செய்ய அவன் தீர்மானித்திருந்தான்.

சிறிது நேரத்துக்கெல்லாம் தனக்கு அருகில் வந்து யாரோ நிற்பது போலவும் தன்னை உற்றுப் பார்ப்பது போலவும் அவனுக்குத் தோன்றியது. மெதுவாகக் கண்களைத் திறந்து பார்த்தான்.

பரஞ்சோதி அஞ்சா நெஞ்சம் படைத்த வாலிபன்தான். ஆனாலும், கண்ணைத் திறந்ததும் எதிரில் கண்ட காட்சி அவனைத் துணுக்குறச் செய்தது.

புத்த சந்நியாசி அவனுக்கு அருகில் வந்து நின்று உற்றுப் பார்த்துக்கொண்டிருந்தார். அவருடைய முகத் தோற்றம் அவனுக்கு அச்சத்தை அளித்தது. அதைக் காட்டிலும் அவர் கையில் வாலைப் பிடித்துத் தலை கீழாகத் தொங்க விட்டுக் கொண்டிருந்த பாம்பு அதிக அருவருப்பையும் பயங்கரத்தையும் அளித்தது.

ஐந்து அடி நீளமுள்ள நாக சர்ப்பம் அது; ஆனால், உயிர் இல்லாதது! அதனுடைய உடலில் இரத்தம் கசிந்தது.

பரஞ்சோதி பரபரப்புடன் எழுந்து, ''அடிகளே! இது என்ன வேடிக்கை? எதற்காகச் செத்த பாம்பைக் கையில் பிடித்துக் கொண்டிருக்கிறீர்கள்? தூர எறியுங்கள்!'' என்றான்.

''பிள்ளாய்! இவ்வாறு காட்டுப் பிரதேசத்தில் தனியாகப் படுத்து உறங்கலாமா? இத்தனை நேரம் இந்த நாக சர்ப்பம் உன்னைத் தீண்டியிருக்குமே? நல்ல சமயத்தில் நான் வந்து இதை அடித்தேனோ, நீ பிழைத்தாயோ?'' என்று சொல்லி விட்டுப் புத்த சந்நியாசி அந்தச் செத்த பாம்பைத் தூர எறிந்தார்.

பரஞ்சோதி தன் முகத்தில் தோன்றிய புன்சிரிப்பை மறைத்துக்கொண்டு, ''அப்படியா, அடிகளே! நான் ஒரு தாய்க்கு ஒரே பிள்ளை. என்னை நீங்கள் காப்பாற்றியதற்காக என் தாயார் தங்களுக்கு ரொம்பவும் நன்றி செலுத்துவாள்'' என்றான்.

பிறகு அவன் மூட்டையையும் வேலையும் எடுத்துக் கொண்டு எழுந்து நின்று, ''தங்கள் திருநாமம் என்னவோ? என் தாயாரிடம் எப்போதாவது தங்களைப் பற்றிச் சொல்ல நேர்ந்தால்....'' என்பதற்குள் பிக்ஷு குறுக்கிட்டு, ''என்னை நாக நந்தி என்பார்கள். நீ எவ்விடத்துக்குச் செல்கிறாய், தம்பி!'' என்று கேட்டார்.

''காஞ்சிக்குப் போகிறேன்'' என்று பரஞ்சோதி கூறியதும், ''நானு

அங்கேதான் போகிறேன்! வழித்துணை ஆயிற்று. வா, போகலாம்!'' என்றார் நாகநந்தி அடிகள்.

* * *

இருண்ட சிறையில் கோரைப் பாயில் படுத்திருந்த பரஞ்சோதி, 'அந்தப் புத்த பிக்ஷுவுக்கு நாக நந்தி என்பது எவ்வளவு பொருத்தமான பெயர்! அவர் முகத்தைப் பார்த்தாலே நாகப் பாம்பின் ஞாபகம் வருகிறது!' என்று எண்ணமிட்டான்.

நாக நந்தி அடிகள் வருங்காலத்தை ஞான திருஷ்டியினால் அறிந்துதான் சொன்னாரோ, அல்லது குருட்டாம் போக்காய்ச் சொன்னாரோ, அவருடைய ஜோசியத்தில் முற்பகுதி நிறைவேறிவிட்டது. தான் இப்போது ஒரு கஷ்டத்தில் அகப்பட்டுக் கொண்டிருப்பது உண்மைதான்; அவருடைய ஜோசியத்தின் இன்னொரு பகுதியும் நிறைவேறுமா? 'புத்த பகவான் அருளால் அந்தக் கஷ்டம் நீங்கும்!' என்று சொன்னது பலிக்குமா? ஆம்; பலிக்கத்தான் வேண்டும்.

உண்மையில் பரஞ்சோதி தன்னுடைய நிலைமையைக் குறித்து அதிகம் கவலைப்படவில்லை. ஏதோ தவறுதலினால் தன்னைச் சிறையில் அடைத்திருக்கிறார்கள் என்றும், உண்மை தெரியும் போது தன்னை நிச்சயம் விடுதலை செய்து விடுவார்கள் என்றும் உறுதியாக நம்பினான்.

எனவே, இன்றிரவு நிம்மதியாகத் தூங்குவதுதான் சரி. ஆனால், ஏன் தூக்கம் வர மாட்டேன் என்கிறது? ஓகோ! எல்லாம் இந்த ஒரு சாண் வயிறு செய்யும் காரியம்தான். 'இராத்திரி ஒன்றும் சாப்பிடவில்லை யல்லவா? பசி வயிற்றைக் கிள்ளுகிறது. அதனால் தான் தூக்கம் பிடிக்கவில்லை. நல்ல காஞ்சி நகரம்! நெடுந் தூரம் யாத்திரை செய்து வந்த அகதிகளை இராப் பட்டினி போட்டுக் கொல்லுகிற இந்த நகரத்தைப் பற்றி என்னத்தைச் சொல்வது! காஞ்சி நகரை அணுகியபோது அந்தத் திகம்பர ஜைன முனிவர் எதிர்ப்பட்டார் அல்லவா? அந்த இராப் பட்டினிக்காரரின் முக தரிசனத்தின் பலன்தான் இன்றிரவு தனக்கு அன்னம் அபாவமாய்ப் போய் விட்டது போலும்!....

மேற்சொன்னவாறு பரஞ்சோதி சிந்தனை செய்து கொண்டிருக்கையில், அந்த அறையில் உண்டான ஒரு மாறுதல் அவனுடைய கவனத்தைச் சட்டென்று கவர்ந்தது. சற்று முன்வரையில் இருள் சூழ்ந்திருந்த அந்த அறையில் இப்போது கொஞ்சம் வெளிச்சம் காணப்பட்டது. இந்த மாறுதலுக்குக் காரணம் என்னவென்று அதிசயித்துப் பரஞ்சோதி மேலே பார்த்தான்; கூரையில் இருந்த சிறு துவாரத்தின் வழியாகச் சந்திர கிரணம் உள்ளே புகுந்து வந்ததுதான் என்று தெரிந்தது. இத்தனை நேரம் இல்லாமல் இப்போது திடீரென்று மேற்படி துவாரம் எப்படி ஏற்பட்டது என்று ஒரு கணம் பரஞ்சோதிக்கு வியப்பா யிருந்தது. ''இல்லை, இல்லை! துவாரம் எப்போதும் இருந்திருக்க வேண்டும்; ஆனால் துவாரத்துக்கு நேராக இப்போதுதான் சந்திரன் வந்திருக்கிறது!'' என்று தனக்குத் தானே சந்தேக நிவர்த்தி செய்து கொண்டான். ஆம்; பூரணச் சந்திரனுடைய மோகன நிலவானது வெளி உலகத்தையெல்லாம் அப்போது சொப்பன் சௌந்தரிய லோகமாகச் செய்து கொண்டிருக்கிறது; — அந்த விஷயத்தைத் தனக்கு எடுத்துச் சொல்லித் தன்னுடைய வயிற்றெரிச்சலைக் கொட்டிக் கொள்வதற்காகவே மேற்கூரைத் துவாரத்தின் வழியாக அந்தச் சந்திர கிரணம் உள்ளே புகுந்து வருகிறது போலும்!...

ஆகா! இது என்ன? உள்ளே வரும் நிலவு வெளிச்சம் இவ்வளவு அதிகமாகி விட்டதே! துவாரம் பெரிதாகியிருப்பது போல் தோன்றுகிறதே? அடடே! முதலில் பார்த்தபோது ஒரு கைகூட நுழைய முடியாத சிறு துவாரமாயிருந்தது. இப்போது ஆள் நுழையக் கூடிய அளவு பெரிதாகி விட்டதே! இது என்ன இந்திர ஜாலமா? அல்லது



மகேந்திர ஜாலமா? மகேந்திர சக்கரவர்த்தியின் காஞ்சிமா நகரம் மாயா ஜால நகரமா யிருக்கிறதே !

ஐயையோ! இதென்ன பயங்கரம்?... பரஞ்சோதியின் மூச்சு ஒரு நிமிஷம் நின்று போய் விட்டது! மேற்கூரைத் துவாரத்தின் வழியாக நெளிந்து நெளிந்து கீழே வந்தது ஒரு நீளமான பாம்பு!.... இல்லை, இல்லை, பாம்பு இல்லை!... அது வெறும் கயிறுதான்! சீ! இன்று மத்தியானம் அந்தப் புத்த பிக்ஷு செத்த பாம்புடன் வந்து தன்னைத் திடுக்கிடச் செய்தாலும் செய்தார்; கயிற்றைப் பார்த்தால் கூடப் பாம்பு மாதிரி தோன்றுகிறது.

மேற்கூரைத் துவாரத்தின் மர்மம் இப்போது புலப்பட்டது. யாரோ வேண்டுமென்றுதான் கூரையில் துவாரம் செய்திருக்கிறார்கள். அதன் வழியாகக் கயிற்றை உள்ளே விடுகிறார்கள்! எதற்காக? வேறு எதற்காக இருக்கும்? தன்னைத் தப்புவிப்பதற்காகத்தான்! ஆனால் முன் பின் தெரியாத இந்தப் பெரிய நகரில் தன்னிடம் அவ்வளவு சிரத்தை கொண்டிருப்பவர்கள் யார்? தான் இந்தச் சிறைச்சாலை அறையில் இருப்பது அவர்களுக்கு எப்படித் தெரிந்தது?

இதற்குள்ளாகக் கயிற்றின் முனை கீழே அவன் கைக்கு எட்டும் தூரத்துக்கு வந்து விட்டது. இன்னும் கீழே வந்து தரையையும் தொட்டு விட்டது. பிறகு, அந்தக் கயிறு இப்படியும் அப்படியும் அசையத் தொடங்கியது. மேலே இருந்து கயிற்றை விட்டவர்கள் அதைக் குலுக்குகிறார்கள் என்பதில் சந்தேகமில்லை. எதற்காக? தன்னை அந்தக் கயிற்றின் வழியாக மேலே வரும்படி சமிக்ஞை செய்கிறார்களா? அப்படித்தான் இருக்க வேண்டும்.

அதிசயமான முறையில் வந்த அந்த உதவியைப் பெற்றுக் கொள்ளலாமா, வேண்டாமா என்று பரஞ்சோதி ஒரு நிமிஷம் யோசனை செய்தான். அதனால் வேறு என்ன தொல்லைகள் விளையுமோ என்பதாக ஒரு பக்கம் அவனுக்கு யோசனையா யிருந்தது. இவ்வளவு சிரத்தை எடுத்துத் தன்னைக் காப்பாற்ற விரும்புகிறவர்கள் யார் என்று தெரிந்து கொள்ள அவனுக்கு ஒருபக்கம் பேராவல் உண்டாயிற்று. அதோடு, இன்னொரு முக்கிய காரணமும் சேர்ந்தது; அது அவனுடைய வயிற்றைக் கிள்ளிக் கொண்டிருந்த பசிதான்!

பரஞ்சோதி கயிற்றை அழுத்தமாய்ப் பிடித்து இழுத்தான்; மேலே அது இறுகக் கட்டியிருக்கிறது என்று தெரிந்தது. தன்னுடைய பாரத்தை அது நன்றாய்த் தாங்கும் என்று நிச்சயமாயிற்று. உடனே கயிற்றின் வழியாக அவன்மேலே ஏறத் தொடங்கினான். (தொடரும்)

அடுத்த வாரம் வண்ணப் படங்கள் : 'புலிகேசி, பரஞ்சோதி



**சிரிப்பின் விலை உயரவில்லை!**

"என்ன பார்க்கிறே? விலைவாசிகள் இருக்கிற இருப்பிலே உனக்கு இனிமேல் பழமொழி ஆகாரம்தான். உன் பசிக்கும் சோளப் பொரிதான்!"



"இந்தத் தெருவிலே யார் வீட்டிலேயோ துணிச்சலா நல்லெண்ணெய் வாங்கி அப்பளம் பொரிக்கறாங்களாம்! வாசனையை மோப்பம் பிடிச்சுண்டு ஓடறாங்க."



"விலைவாசி ஏற்றம் எங்கும் பேச்சா இருக்கிற சமயத்தில் விலை குறைஞ்ச சமாசாரம் ஒண்ணு சொல்லட்டுமா?"

"எது, எது?"

"நூறு ரூபாய் நோட்டின் விலை எண்பது ரூபாயாகக் குறைஞ்சிருக்காம்!"



மாப்பிள்ளைப் பையன்: உனக்குச் சமைக்கத் தெரியுமா??

பெண்: இன்றைக்குள்ள விலைவாசியிலே உங்களுக்குச் சமையல் சாமான் வாங்கிப் போடத் தெரியுமா?


இன்ஸ்பெக்டர் விக்ரம்
3


படாதிபதி மல்ஹோத்ரா, தனது திரைப்படக் கதாநாயகி கடத்திக் கொண்டு போகப்பட்டதுபற்றித் தனக்குத் தெரிந்தவற்றையெல்லாம் விக்ரமிடம் கூறினர்.
அவளே ஏன் தனியாகப் போக அனுமதித்தாய்?
அடுத்த காட்சியைப் படமெடுக்கத் தேவையானவற்றைக் கவனிப்பதில் அனைவரும் ஈடுபட்டிருந்தனர்.


மேலும் போலீஸ் பாதுகாப்பு இருந்த எல்லையைத் தாண்டி அவள் போவாள் என்று நாங்கள் எதிர்பார்க்கவே இல்லே !
சில்லால்! நீதானே அங்கு டியூட்டியில் இருந்தாய்?


அவளே நீ ஏன் தடுத்து நிறுத்தவில்லே?


ஸார்! நமது பாதுகாப்பு எல்லேக்கு உட்பட்டுத்தான் அவள் இருந்தாள்.
அப்படியிருந்துமா அவள் மாயமாய் மறைந்தாள்?


ஒரு குழப்பம் நேர்ந்துவிட்டது!
விளக்கம் தேவை!
சொல்கிறேன்.


நான் கணவாயின் எல்லேயில் உட்கார்ந்திருந்தேன். என் ஆட்கள் எல்லாத் திசைகளிலும் காவல் இருந்தார்கள்.
எங்கே போகிருள் இவள்?


கதாநாயகி நூதனமாகத் தோன்றிய சில கற்களைப் பொறுக்கிக் கொண்டிருந்தாள்.


அவள் தனியாகவா இருந்தாள்?
ஆமாம், ஸார் !

(தொடரும்)

ஒரே கனேபரமான வாத்திய இசை முழங்க விளக்குகள் எரிய ஆரம்பித்தன. அது காறும் நிஜ வாழ்க்கையின் உணர்வுகளை மரத்துப்போகச் செய்து, பாட்டும் கூத்துமாய் ஒரு மாயத் தோற்றம் காட்டி வந்த வெள்ளித் திரை தன் வேடம் கலைந்து, வெறுந் துணியாய், வெள்ளை வெளேரென்று பளிச்சிட்டது. மேலேயிருந்து பொன்னிறத்தில் ஒரு படுதா மடிப்பு மடிப்பாய் மெல்லக் கீழே இறங்கி வெண் திரையைப் போர்த்தத் தொடங்கியது —இடைவேளை.

வெளியே எழுந்து சென்று கொஞ்ச நேரம் காலாற நின்று சுத்தமான காற்றைச் சுவாசித்துவிட்டுத் தம் இருக்கைக்குத் திரும்பினார் முருகேசன். அடுத்த ஆசனத்தில் அமர்ந்திருந்த அவர் மனைவி பங்கஜம் கேலிப் புன்னகையுடன் அவரைப் பார்த்தாள்.

''அதோ அங்கே நிக்கிறது யார்னு தெரியுதா?''

''எங்கே?'' — பங்கஜம் சுட்டிக் காட்டிய திசையை ஆவலோடு நோக்கினார் முருகேசன்.

முன் வரிசையில் நாலைந்து இருக்கைகள் தள்ளி ஒரு சிறுவன் பராக்குப் பார்த்தவாறு நின்றிருந்தான். அவர்கள் அமர்ந்திருந்த திசை நோக்கி அவன் திரும்பி நின்றிருந்த போதிலும் அவனது பார்வை அவர்கள் மீது பதியாமல் அவர்களைத் தாண்டி வேறு எங்கேயோ லயித்திருந்தது.

''யாரு? அந்தப் பிள்ளையாண்டானா?''

''ஆமாம்'' என்று அழகு காட்டுகிறமாதிரி உதட்டைச் சுழித்தாள் பங்கஜம்.

புத்தம் புதிய சொக்காயும் கால் சட்டையும் தரித்துப் பளிச்சென்று தோற்றமளித்த அவனை முருகேசனுக்கு அடையாளம் தெரியவில்லை. ''தெரியல்லே... யாரது?''

''தெரியலியா? அதுக்குள்ளாற நீங்க மறந்துட்டீங்களா? இன்னைக்குக் காலம்பறத் தானே சொளையாட்டம் அஞ்சு ரூபாயைத் தூக்கிக் குடுத்தீங்க...அவங்கம்மா கருமாதிச் செலவுக்கு!'' — பங்கஜம் குத்தலாக அப்படிக் கூறியதும் சட்டென்று அவருக்கு அந்த முகம் பரிச்சயமாகி விட்டது. ''அட, அவன்மாதிரி தான் இருக்கு!'' என்றார்.

''மாதிரியில்லே... அவனேதான். காலம்பற அவனைப் பார்த்தப்ப வேஷங் கட்டிக்கிட்டு இருந்தான். இப்ப 'மேக் - அப்' பைக் கலைச்சிட்டு சுயரூபத்திலே வந்திருக்கான். அதான் சட்டுனு



உங்களுக்கு அடையாளம் தெரியலே! நீங்க எழுந்திருச்சு வெளியே போனப்பவே பிடிச்சு உத்துப் பார்த்துக்கிட்டே இருந்த பிறகுதானே எனக்கே அவன் யாருன்னு புரிஞ்சுது!''

''அடப் பாவி! காலம்பற நாம பார்த்த அந்தப் பயலா இப்ப இவ்வளவு ஷோக்கா இருக்கான்!'' என்று பிரமித்தார் முருகேசன்.

''நான்தான் அப்பவே சொன்னேனே — இதெல்லாம் பொழைப்புக்கு ஒரு வழின்னு. நீங்கதான் அதெல்லாம் இருக்காதுன்னு அவனுக்குப் பரிஞ்சுக்கிட்டு வந்தீங்க. அனுவசியமா எதுக்கு ஒருத்தனைச் சந்தேகப்படணும்னீங்களே, இப்ப என்ன சொல்றீங்க?''

''என்ன சொல்லணுங்கறே? நீ சொன்னது தான் சரியாகிப் போச்சுன்னு ஒத்துக்கறேன். நீ மகா புத்திசாலி. நான்தான் ஏமாந்த சோணகிரி. போதுமா? இல்லே பத்திரம் பதிஞ்சு சாட்சிக் கையெழுத்தும் வாங்கித் தரவா?'' என்றார் முருகேசன், எரிச்சலுடன்.

''ஆமா, எதுக்கெடுத்தாலும் கோவம் மட்டும் பொத்துக்கிட்டு வந்துடும். இந்தக் கோவத்தை அவன்கிட்டக் காட்டினாலாச்சும் எதுனாப் பிரயோசனம் இருக்கும். இன்னொரு வாட்டி இந்த மாதிரிப் பித்தலாட்டம் பண்ணப் பயப்படுவான் இல்லியா? அவனை மடக்கி நல்லா மிரட்டுங்க. நியாயப்படி இவன் மாதிரி அயோக்கியப் பசங்களை யெல்லாம் கையோட போலீசிலே பிடிச்சுக் குடுக்கணும்'' என்று பங்கஜம் கடகடப் பதிலிறுக்கையில் விளக்குகள் அணைந்து திரைப்படம் ஓடத் தொடங்கி விட்டது.

''சரி, சரி. இப்ப நீ படத்தைப் பாரு. படம் முடிஞ்சப்பறம் அவனைக் கவனிச்சுக்கலாம்.''

பங்கஜம் சுவார்சியமாகப் படம் பார்க்க ஆரம்பித்தாள். ஆனால் அவருக்குத் திரையில் மனம் ஒன்றவில்லை.

புத்தம் புதிய சொக்காயும் கால்சட்டையும்... காலையில் பார்த்த அந்தப் பையனா இவன்? தலை நிறைய எண்ணெய் தடவிச் சிகையைப் படியப் படிய இவன் வாரிவிட்டுக் கொண்டிருக்கும் நேர்த்தி... இவன்தானா அந்தப் பையன்?

இந்தச் சின்னப் போக்கிரியின் மாய்மாலத்தை நிஜமென்று நம்பி ஏமாந்துவிட்ட



# ஒரு வேடம் கலைகிறது!

மலர் மன்னன்

தற்கு மேல் இனி ஆயுசுக்கும் பங்கஜம் அவரை இளப்பம் காட்டிக் கொண்டிருக்கப் போகிறாள். அதற்காகவே அவன் மீது பாய்ந்து, கண்மண் தெரியாமல் அடித்து நொறுக்கிவிடலாம் போல் அவருக்கு ஆத்திரம் பொங்கி வந்தது.

அன்று காலையில் முருகேசன் பங்கஜத்தை அழைத்துக் கொண்டு துவுளி எடுக்க டவுனுக்குப் போயிருந்தார். துணிமணிகளை வாங்கிக் கொண்டு வீடு திரும்புவதற்காக அவர்கள் பஸ் ஸ்டாண்டுக்கு வந்து சேர்ந்த போது, 'சார்! சார்!' என்று கெஞ்சியவாறு ஒரு சிறுவன் எதிரே தோன்றினான்.

கைநீட்டி நின்ற சிறுவனை ஏற இறங்க நோக்கினார் முருகேசன். மூக்குக் கண்ணாடியின் பருமனான கண்ணாடிச் சில்லுக்குப் பின்னாலிருந்து பூதாகாரமாய் விழித்த அவரது கண்களின் கூர்மையைத் தாங்க மாட்டாதவனாய்ச் சிறுவன் தலையைக் குனிந்து கொண்டான்.

அவனுக்கு வயது பதினைந்துகூட ஆகியிருக்காது. முகம் வாடி வதங்கித் தாறுமாறான அனுபவங்களால் முற்றியிருந்த போதிலும் இன்னும் அது முதிர்ச்சியடையத் தொடங்கவில்லை. அவன் வயசுக்குரிய குறுகுறுப்பும் அலாதியான கவர்ச்சியும் அந்த முகத்திலும் இல்லாமல் இல்லை.

அழுக்கும் எண்ணெய்ப் பிசுக்குமாக இயந்திரங்களைத் துடைப்பதற்குப் பயன்படும்

கந்தலைப் போன்ற ஓர் அரை நிஜார் தவிர அவன் உடம்பில் வேறு உடையில்லை. அதைத் தனது ஒடுங்கிப் போன வயிற்றில் நாபிக்கும் மேலே அவன் இறுக முடிச்சுப்போட்டிருந்தான்.

தமக்கு எதிரில் ஈனப்பிறவியாய்க் கைநீட்டி நின்றிருந்த அவனைக் கண்டதும் 'பரந்து கிடக்கிற இந்தப் பெரிய தேசம் முழுதும் இந்த வினாடியில் எத்தனை சிறுவர்கள் இவனைப் போலவே கையேந்தி நின்று கொண்டிருப்பார்கள்' என்று ஒரு யோசனை தோன்றி முருகேசன் துணுக்குற்றார்.

ஓடும் ரயில்களில், கோவில் நடைகளில், கடைத் தெரு ஓரங்களில், பஸ் நிறுத்தங்களில், கடற்கரையில், திரைப்படக் கொட்டகையில் எங்கெங்கெல்லாம் நாலு பேர் கூடுகிறார்களோ, அங்கெல்லாம் 'சார், சார், சார்... யம்மா, யம்மா, யம்மா...' என்ற ஒலி.

இந்தப் பெரிய தேசமே திடீரென்று ஒரு கந்தல் நிஜார் மட்டும் அணிந்து வயதுப் பையனாய் உருவெடுத்து பூமியெங்கணும் நாய் மாதிரி ஓடி ஓடி 'சார், சார்,.... யம்மா, யம்மா, யம்மா...' என்று ஒலிப்பது போன்ற பிரமை.

முருகேசன் தலையைக் குலுக்கி அந்த விபரீதக் கற்பனையை உதறி எறிந்தார்.

''அம்மா செத்துப் போயிட்டாங்க சார்... செலவுக்குக் காசில்லே... எதாச்சும் தருமம் பண்ணுங்க சார்...'' — தன் யாசகத்துக்கு அவன் சொன்ன காரணத்தைக் கேட்டதும் முருகேசன் அதிர்ந்து போனார். பரபரப்புடன் சட்டைப் பையிலிருந்து பர்சை எடுத்துத் திறந்தார். நாலைந்து பெரிய நோட்டுகளுக்கிடையே தெரிந்த ஒரு சிறிய நோட்டை உருவி எடுத்து அவனிடம் நீட்டினார்.

அதை வாங்கிக்கொள்ளப் பையன் ஒரு கணம் தயங்கினான்.

''உம், இந்தா. வாங்கிட்டுப் போ.''

அவ்வளவு நேரமாய் அவர்கள் இருவரையும் மௌனமாகக் கவனித்துக் கொண்டிருந்த பங்கஜம், தன் கணவர் ஓர் ஐந்து ரூபாய் நோட்டைப் பிச்சையிட முன்வந்த விசித்திரத்தைக் கண்டு திகைத்தவளாய் ''என்னங்க இது'' என்று குறுக்கிட்டாள். அதற்குள் தட்டிப் பறிப்பது போல் அவர் கையிலிருந்த நோட்டைப் பிடுங்கிக்கொண்டு ஓட்டம் எடுத்தான் அந்தச் சிறுவன்.

''இதென்ன அக்கிரமமா இருக்கு? பிச்சைன்னு ஒரு பைசா ரெண்டு பைசா போடுவாங்க. முழுசா அஞ்சு ரூபாயைத் தூக்கிக் குடுத்தா என்ன அர்த்தம்?'' என்று அங்கலாய்த்தாள் பங்கஜம்.

''போனாப் போகுது பங்கஜம். அம்மா இறந்து போனதா அவன் சொன்னது உன் காதிலே விழலியா?''

''நல்லா இருக்கே! அவனுங்களுக்கெல்லாம் தினம் அப்பனோ ஆத்தாளோ செத்துப் போய்க்கிட்டுத்தான் இருப்பாங்க. இதெல்லாம் பொழைப்புக்கு ஒரு வழின்னு புரிய வேணும்? பிச்சைன்னு வந்தவன் எதைச் சொன்னாலும் சத்திய வாக்குன்னு அப்படியே நம்பிடறதா? பெரிய கோடீச்வரனாட்டம் நீங்க அஞ்சு ரூபாயைத் தூக்கிக் கொடுத்ததுக்கா- அவன் உங்களைத் 'தயாள பிரபு'ன்னு கொண்டாடுவான்னு நினைச்சீங்களா? 'சரியான ஏமாளி'ன்னு மனசுக்குள்ளே கேலிதான் பண்ணுவான். தெரிஞ்சுக்குங்க!''

''அவன் என்னைக் கொண்டாடணுங்கறதுக்காக நான் குடுக்கலியே! பார்க்கிறவங்க என்னைப் பெரிய கோடீசுவரன்னு நினைக்கணுங்கறதுக்காகவும் குடுக்கல்லே. அதென்னமோ அப்பிடிக் கேட்டப்ப கைக்கு வந்ததைக் குடுக்கணும்னு தோணிச்சு. அந்த வினாடிக்கு முந்தியோ பிந்தியோ ஆகியிருந்தா அப்பிடிக் குடுத்திருப்பேனுங்கறது எனக்கே சந்தேகம் தான். அவன் சொல்றது நிஜமா பொய்யான்னு எல்லாம் அப்ப யோசிக்கத் தோணலே, பங்கஜம்... அடையாளம் தெரியாத ஏதோ ஒரு சந்திலே ஈயும் எறும்பும் மொய்க்க ஓர் அனாதைப் பிணம் 'எப்ப எப்ப'ன்னு பொறப்படறதுக்குக் காத்துக் கிட்டிருக்கிறமாதிரி தோணிச்சு. சட்டுன்னு எடுத்துக் குடுத்துட்டேன். இப்பக்கூட அவன் சொன்னது நிஜம், நான் குடுத்ததும் நம்ம சக்திக்குக் கொஞ்சம் அதிகமானாலும் நியாயம்தான்னு எனக்குப் படுது. உங்கிட்ட உதவி கேட்கிறவங்களை யெல்லாம் பொய் சொல்றவங்க, ஏய்ச்சுப் பொழைக்கிறவங்கன்னு நீ எதுக்குச் சந்தேகப்படணும்?''

''உக்கும், இந்த மாதிரி தர்க்கம் பண்ணறதுக்கு மட்டும் நல்லாக் கத்து வெச்சிருக்கீங்க. உங்ககிட்டக் கையேந்தறவனெல்லாம் அரிச்சந்திரனா இருக்கட்டும். நான் சந்தேகப் பிராணியாகவே இருந்துட்டுப் போறேன்'' என்று பிணங்கினாள் பங்கஜம்.

கடைசியில் பங்கஜம் சொன்னமாதிரியே வெறும் வேடத்தைக் கண்டு தாம் ஏமாந்து விட்டோம் என்பது அன்றிரவே முருகேசனுக்கு வெட்ட வெளிச்சமாகி விட்டது.—பங்கஜத்துடன் படம் பார்க்க வந்த இடத்தில்!

படம் முடிந்ததும் அந்தச் சிறுவனை வழி மறித்து ஒருகை பார்த்துவிட வேண்டுமென்று தான் முருகேசன் கறுவிக் கொண்டிருந்தார். ஆனால் தேசிய கீதத்துக்கு எழுந்து நின்று மரியாதை செலுத்திவிட்டுக் கும்பலில் மெதுவாக ஊர்ந்து அவர் வெளியே வந்து சேருவதற்குள் அவன் கூட்டத்தில் முண்டியடித்துக் கொண்டு வெளியேறி மாயமாய் மறைந்து விட்டிருந்தான்!

''கோட்டை விட்டுப்புட்டீங்களே!'' என்று ஏளனமாகச் சிரித்தாள் பங்கஜம்.

''போனால் விடு'' — முருகேசன் அசுவாரசியமாகச் சூள் கொட்டினார். உள்ளூற மனம் மட்டும் பொருமியது.

''இனிமேல்பட்டாவது கொஞ்சம் புத்திசாலித்தனமாக நடந்துக்குங்க. நீங்க பரிதாபப்படற அளவுக்கு நிஜமா யாரும் கஷ்டப்பட்டுக்கிட்டு இல்லே. நீங்க நம்பற அளவுக்கு நிஜமா யாரும் நாணயஸ்தர்களாவும் இல்லே. எதாச்சும் லாபம் கிடைக்குதுன்னு எந்த வேஷம்னாலும் கூசாமப் போட்டுக்கத் தயாரா இருக்கிறவங்க காலம் இது. சின்னப் பிள்ளையாட்டம் 'கண்டதே காட்சி'ன்னு இருந்தால் எப்பிடி?''

''சரி, சரி. உன் உபதேசத்தை யெல்லாம் வீட்டுக்குப் போயி வெச்சுக்கலாம். நடையைக் கொஞ்சம் எட்டிப் போடு. அப்புறம் பஸ் கிடைக்காமப் போயிடப் போவுது''

# பண்டைய நாகரீகத்தின் மறுமலர்ச்சி

'காஜ்ரா' மற்றும் 'துப்பட்டா'களின் பாரம்பரை நாகரீக கவர்ச்சிக்கு
புதிய எழிலூட்டுகின்றன மபத்லாலின் 'மெஃப்ரின்' உடுப்புத் துணிகள்.
பாலியெஸ்டர் மற்றும் காட்டன் இழைகலந்த 'மெஃப்ரின்' பண்டைய
கற்பனைகளுக்கு, நவநாகரீக ஒளியோடு கூடிய வண்ணம், வடிவம்
மற்றும் செயலின் நேர்த்தியை இழைத்து, கிளர்ச்சியூட்டும்
மறுமலர்ச்சியை அளிக்கிறது!

**மபத்லால்**
**க்ரூப்** அளிக்கும்
நேர்த்தியான துணிமணிகள்



**மெஃப்ரின்**
பாலியெஸ்டர் சேலைகள் மற்றும்
உடுப்புத் துணிகள்

AIYARS-M.338 T/I







**மாசில்லாத பளபளப்பை வீசிட வைப்பது விம்.**



**கசடு இல்லை!**
**பிசுக்கு இல்லை!**
**கீறல் இல்லை!**

இந்துஸ்தான் லீவரின் தரமான தயாரிப்பு.

லின்டாஸ்-V-38-14C

என்று அவன் வாயை அடைத்து விட்டார் முருகேசன்.

ஒரு வாரத்துக்குப் பின் அவர்கள் மீண்டும் ஏதோ காரியமாய் டவுனுக்கு வந்தபோது அந்தச் சிறுவனை மறுபடியும் காணும் சந்தர்ப்பம் தற்செயலாக வாய்த்தது. இப்போதும் பங்கஜத்தின் கண்களில்தான் அவன் முதலில் தென்பட்டான்.

சாலை இருப்பத்தில் நடைபாதையின் மேல் நிழலோரமாக அமர்ந்தபடி ஒரு வாலிபனின் காலணிகளுக்கு மெருகேற்றுவதில் மும்முரமாக முனைந்திருந்த அவனைச் சுட்டிக் காட்டி, ''இந்தாங்க, உங்க 'ஹீரோ' இப்ப புதிசா இன்னொரு வேஷம் கட்டிக்கிட்டிருக்காரு. பூட் பாலிஷ்... தேல் மாலிஷ்'' என்றாள் பங்கஜம் கிண்டலாக.

''அடடே, அவந்தானா? போயி மடக்கலாம், வா'' – முருகேசன் அவனை நோக்கி விரைந்தார்.

இருவருமாக அந்தச் சிறுவனை அணுகுவதற்குள் அவன் வாலிபனை அனுப்பிவிட்டு அடுத்த கிராக்கியை எதிர்பார்க்கத் தொடங்கியிருந்தான்.

முருகேசன் மௌனமாக அவன் எதிரில் போய் நின்றார். அவன் அவரை அடையாளம் கண்டுகொண்டதாகவே தெரியவில்லை.

''பாலிஷா, வாங்க சார்!'' என்று உற்சாகமாக அவரை வரவேற்றான். அன்றாடம் விதம் விதமாய் எத்தனையோ முகங்களைக் காண வேண்டியிருக்கிற அவனுக்கு அவர் முகம் நினைவிருக்க நியாயம் இல்லைதான்.

முருகேசன் தமது வலப் பாதத்தை அவன் முன்னால் இருந்த மர மேடையில் வைத்து விட்டு அவனையே உன்னிப்பாகப் பார்க்கத் தொடங்கினார்.

சினிமாப் பார்க்க வந்தபோது உடுத்தியிருந்த உடைகளைத்தான் அவன் இப்போதும் அணிந்திருந்தான். இந்த ஒரு வார காலத்தில் அது கசங்கியும் அழுக்கேறியும் உருமாறிப் போயிருந்தது.

''ஏய்ச்சுப் பொழைக்கிற வழக்கத்தை இப்ப விட்டுட்டியா பையா? இல்லே 'பார்ட் டைம் ஜாப்' மாதிரி அதையும் அப்பப்ப பார்த்துக்கிட்டுத்தான் இருக்கியா?''

பையன் சட்டென்று தலை நிமிர்ந்து அவரை அண்ணாந்து பார்த்தான். முகத்தில் திகில் பரவியது. கைகள் செயலிழந்து தொய்ந்தன. முருகேசன் வக்கிரமாகச் சிரித்தார்.

''அம்மா இறந்து போயிட்டதா கூசாமப் பொய் சொல்லி அன்னைக்குப் பிச்சை எடுத்தே இல்லியா? நாங்கூட அதை நிஜம்னு நம்பி அஞ்சு ரூபா குடுத்தேன். உம்... எத்தனையோ பேருங்கிட்ட அப்படிச் சொல்லிப் பிச்சை வாங்கி யிருப்பே. குறிப்பா என்னை ஞாபகம் வெச்சுக்க உன்னாலே முடியாது தான்....''

பையன் சரேலென எழுந்து நின்றான். அவனுக்கு உடம்பு இலேசாகப் பதறத் தொடங்கி விட்டது. முருகேசன் சினத்தை அடக்கிக் கொண்டு அமைதியாகப் பேச்சைத் தொடர்ந்தார்: ''அன்னைக்கு ராத்திரியே ஒரு சினிமாத் தியேட்டரிலே உன்னை நான் பார்த்தேன். ஆனா அது உனக்குத் தெரியாது!''




பையன் தலையைக் குனிந்து கொண்டான்.

''உம், மனசார அப்பிடி ஒரு பொய்யைச் சொல்லி அன்னைக்கு எவ்வளவு சம்பாதிச்சிருப்பே?''

அவன் பதில் பேசாமல் நின்றான்.

''இதப் பாரு, கேக்கறதுக்கு ஒழுங்கா உடனே பதில் சொல்லணும். இல்லே, தொலைச்சுப்புடுவேன், தொலைச்சு! உம், சொல்லு, எவ்வளவு சம்பாதிச்சே அன்னைக்கு?'' என்று அதட்டினார் முருகேசன்.

அவன் தலைநிமிரத் துணிவின்றி, மௌனம் சாதிக்கவும் தைரியமின்றி ''முப்பது ரூபா வரைக்கும் இருக்கும்'' என்று முணகினான்.

''எல்லாத்தையும் என்ன செய்தே?''

''ரெடிமேட் ஷாப்புக்குப் போயி இந்தச் சட்டையும் பாண்டும் எடுத்தேன். சலூனுக்குப் போயி முடி வெட்டிக்கிட்டேன். பெரிய ஹோட்டலுக்குப் போயி ஏர் - கண்டிஷன் ரூமிலே உக்காந்து பிரியாணி துன்னேன். சினிமாவுக்குப் போனேன்'' – பயத்தில் அவன் பாடம் ஒப்பிப்பது போல் அவசரம் அவசரமாகத் தன் செலவைச் சொல்லி முடித்தான்.

''அவ்வளவுதானா?''

''மிஞ்சின காசுக்குப் பூட்பாலிசு, புருசு வாங்கி வைச்சுக்கிட்டு ஒழுங்கா இந்தத் தொழில் பண்ண ஆரம்பிச்சிருக்கேன் சார்!''

''அடாடாடா, என்ன யோக்கியதை! பித்தலாட்டம் பண்ணிப் பிச்சை எடுக்கிறது தப்புன்னு எப்பிடியப்பா திடீர்னு உனக்கு ஞானோதயமாச்சு? நாலு வாட்டி தப்பு வழியிலே சம்பாத்தியம் பண்ணிப் பணம் சேர்த்துக்கிட்டு, பின்னாடி மாட்டிக்கக்கூடாதுங்கற முன்யோசனையோட பலபேர் யோக்கியமான தொழில் பார்க்கத் தொடங்கிறாங்களே. அந்த மாதிரி நீயும் பூட் பாலிஷ் போட ஆரம்பிச்சுட்டே போலிருக்கு. அப்படித்தானே?'' என்று சிரித்தார் முருகேசன்.

''நான் எப்பவுமே பிச்சை எடுத்தது கிடையாது சார்!'' என்று ரோசத்துடன் பதிலிறுத்த சிறுவன், உடனே வேதனையோடு ''அன்னைக்கு மட்டுந்தான் அப்படி நடந்துக்கிட்டேன்'' என்று அரற்றினான்.

''குத்தவாளிங்க எப்ப மாட்டிக்கிட்டாலும் அதுதான் முதல் தடவையா செய்த குத்தம்னு சொல்லிக்கிறதுதான்டா வழக்கம்.''

''இல்லே சார்! பஜார்லேயும் பஸ் ஸ்டாண்டிலேயும் மூட்டை தூக்கிப் பொழைச்சேனே

ரேகா — அனந்த் பாய் — ராம் வாயிர்கர்









கண்டி பிச்சை எடுக்கல்லே சார்!'' என்று மீண்டும் ரோசத்துடன் சாதித்தான் அவன்.

''ஓகோ! அப்ப அண்ணைக்கு மட்டும் எதுக்காகத் திமிர்னு அப்படி நாடகமாடிப் பிச்சை எடுத்தே?'' என்று மடக்கினார் முருகேசன்.

''பெரிய பெரிய ஹோட்டல் வாசல்லேயும் தியேட்டருங்க முன்னாலேயும் நின்னு வர்றவங்க, போறவங்களைப் பார்த்துப் பார்த்து எப்படியாச்சும் நாமளும் ஒரேயொரு நாளாச்சும் அவங்களைப் போல ஜம்முனு டிரஸ் பண்ணிக்கிட்டு ஹோட்டலுக்கும் சினிமாவுக்கும் போயிட்டு வரணும்னு ஆசையா இருந்துச்சு சார். நானும் அடக்கி அடக்கிப் பார்த்தேன். முடியல்லே...'' — அவன் துயரத்துடன் தலையைத் தாழ்த்திக் கொண்டான்.

முருகேசன் திடுக்கிட்டார். என்ன சொல்வதென்று புரியாமல் ஒரு கணம் தடுமாறினார். ஆடம்பரமான பெரிய ஹோட்டல்களுக்கும் தியேட்டர்களுக்கும் போகும்போதும் உள்ளே சுகம் அனுபவித்துவிட்டுத் திரும்புகிறபோதும் வெளியே பலர் ஒரு வேளை வயிற்றுப்பாட்டுக்கும் வழியில்லாமல் ஏக்கத்துடன் நிற்பதை அவர் பார்த்தவர்தான். அவர்களுக்காக அநுதாபப்பட்டுத் 'தர்மம்' செய்துமிருக்கிறார். அந்தத் தர்மமே அவர்கள் தம்மிடம் எதிர்பார்ப்பதென்றும், அதுவே அவர்களுக்கு மனநிறைவு தந்துவிடுமென்றும்தான் அவர் நினைத்திருந்தார். தங்களுடைய பகட்டு அவர்களுக்குள் பெருந் தீயாய் ஆசையைக் கிளறிவிடும் என்று ஒருபோதும் அவருக்குத் தோன்றியதே இல்லை. ஒருவாறு தம்மைச் சமாளித்துக் கொண்டு தம் தரப்பு நியாயத்தை ஸ்தாபிக்க விரும்புபவரைப் போல, ''அதுக்காக மத்தவங்களை ஏமாத்திப் பணம் பறிக்கிறதா? தெனம் சம்பாதிக்கிற காசிலே மிச்சம் பிடிச்சு வெக்கிறது. சேர்ந்த காசை இஷ்டப்படி செலவழிக்கிறது! அதுதானே மொறை?'' என்று தர்க்கித்தார்.

''ஆமா... நான் செய்தது தப்புத்தான் சார்... மத்தவங்களை ஏமாத்தறது தப்புத்தான்'' என்று குற்றத்தை ஒப்புக்கொள்பவனைப் போல் தீனமாக முனு முனுத்த அவன் திடீரென்று ஆக்கிரமடைந்தவனைப் போல் ''மத்தவங்க எல்லாம் எத்தனையோ வாட்டி எத்தனையோ விதமா என்னை ஏமாத்தலாம். ஆனா நான் மட்டும் மத்தவங்களை ஏமாத்தக் கூடாது இல்லியா சார்?'' என்று கேட்டான்.

முருகேசன் பிரமித்து நின்றார். முகத்தில் அறைகிறாற்போல் அவன் அப்படிக் கேட்டதில் குழப்பம் அடைந்தவராய், ''என்னடா கதை படிக்கிறே? அப்படி எவன் உன்னைப் பிரமாதமா ஏமாத்திப்பிட்டான்? அப்படியே ஒன்னை ஒருத்தன் ஏமாத்தினாலும் அதுக்காக நீ மத்தவங்களை ஏமாத்திடறதா? அது ஞாயமாயிடுமா?'' என்று அதட்டல் போட்டார். ஆனால் குரல் வலுவிழந்து விட்டிருந்தது.

''நான் ஒண்ணும் கதை படிக்கல்லே சார். யாரோ ஒரே பொருத்தர்தான் என்னை ஏமாத்திட்டாருங்கறதும் இல்லே. என் மாதிரி இருக்கிறவங்களுக்கு எல்லாருமே ஏமாத்தறவங்கதான். மூட்டை தூக்கிப் பொழைச்சப்பல்லாம் தூக்கின சுமைக்கு ஒருத்தர்கூட எனக்குஞாயமான கூலி குடுத்தது கிடையாது சார்! பேரம் பேசின கையை ஓங்கிக்கிட்டு வருவாங்க. சிலபேர் பேசின கூலியைக்கூட கூசாம குறைச்சுக் குடுப்பாங்க. கேட்டா அடிச்சு விரட்டுவாங்க. கழுத்து வலிக்க நாள் முழுக்க மாடா உழைச்சாலும் ஒரு ரூபா கூடத் தேறாது சார்.... அப்படி உழைச்சுச் சம்பாதிச்ச காசையும் சில சமயங்களிலே ஊரை மேய்ஞ்சுக்கிட்டுத் திரியற பெரியவன் எவனுச்சும் தட்டிப் பறிச்சுக்கிட்டுப் போயிடுவான். வேலை செய்யறப்ப நாங்க பெரியவங்க மாதிரி வேலை செய்யணும். ஆனா கூலி வாங்கறப்ப மட்டும் பொடிப்பசங்களா ஆயிடணும். கிடைச்ச காசை ரவுடிப் பசங்க பிடுங்கிக்கிட்டுப் போறப்ப அவங்க பெரியவங்களாச்சேன்னு கப்சிப்னு இருந்திடணும். இதையெல்லாம் யாரு சார் கேக்கறது? தெனந் தெனம் ஊரே நம்பளை ஏமாத்திப் பொழைச்சுக்கிட்டு இருக்கே, பதிலுக்கு நாமளும்தான் ஒரு நாளைக்கு ஊரை ஏமாத்துவோமேன்னு ஒரு கோவத்திலே ஏதோ ஒரு வேகத்திலே அப்படிப் பொய்யைச் சொல்லிப் பணம் சம்பாதிச்சு, ஏதோ ஒரு ஆசையிலே 'ஏக் தின்கா சுல்தா'னாட்டம் ஜாலியா அதைக் கண்டபடி செலவழிச்சான பிறகு நாம செய்தது சரியில்லேன்னு தோணினதுனாலேதான் மிச்சமிருந்த காசிலே பாலீசும் புருசும் வாங்கி வெச்சுக்கிட்டு இனிமேயாச்சும் நல்லபடியா பொழைக்கலாம்னு இப்படி உட்கார்ந்திருக்கேன் சார். அன்றாடம் கிடைக்கிறதுலே இருபத்தஞ்சு காசு விநாயகர் கோயில் உண்டியிலே போட்டு எங்கடனைத் தீர்த்துக்கிட்டுத்தான் வர்றேன் சார்....''

ஆவேசத்துடன் படபடவென்று பேசிக்கொண்டே வந்த அவன், கடைசியில் குரல் உடைந்து வெற்று விசும்பலாய்த் தன் பாரம் முழுவதையும் இறக்கி வைத்தபோது அவனைத் தேற்ற வேண்டும் என்று கூடத் தோன்றாமல் முருகேசனும் பங்கஜமும் வெறும் தூண்கள் மாதிரி திகைத்து நின்றார்கள்.

# என்ன பொருத்தம்?

எஸ். லட்சுமிசுப்பிரமணியம்

**ப**ளபளவென்ற மேஜையின் மீது முழங்கையை ஊன்றிக் கொண்டு முகம் கவிழ்ந்தபடி உட்கார்ந்திருந்தாள் சித்ரா. இன்னும் மாலை நான்கு மணி ஆகவில்லை. அந்தப் பெரிய வாசலில் கார்கள் குவிய ஆரம்பிக்கவில்லை.

துணிமணிகள், பழங்கள், குழந்தைகளுடைய விளையாட்டுச் சாமான்கள், மளிகைச் சாமான்கள், புத்தகங்கள் இப்படி வகை வகையாகப் பிரித்து, ஒவ்வொன்றுக்கும் ஒரு மாடியாக ஒதுக்கியிருந்த 'சூபர் மார்க்கெட்' அது. சித்ரா அங்கே வேலைக்கு வந்து மூன்று ஆண்டுகள் முடியப் போகிறது. அவள் கவனித்தது புத்தகங்கள் பகுதி.

அந்த சூபர் மார்க்கெட்டுக்கு வருபவர்கள் பலரையும் அவள் கவனித்திருக்கிறாள். ''இன்றைக்கு இருந்தால் போதும்'' என்று நினைப்பவர்கள்தான் அநேகம் பேர். செலவுக்குப் பணம், வீட்டுச் சாமான்கள், எல்லாவற்றிலும் அந்த மனப்பான்மைதான். மூன்றாவது மாடியில் இருந்த ரெஸ்டாரெண்டுக்கு வரும் இளைஞர்களும், பெண்களும் அப்படித்தான். மாதத்தின் முதல் வாரம் கூத்தும் கும்மாளமுமாக இருக்கும்; கடைசி வாரம் சோபை மங்கிக் கிடக்கும்.

''என்ன யோசனை மேடம்?''

அவர் வந்து நின்றுவிட்டால் சனிக்கிழமை என்று அர்த்தம். மறு நாள் விடுமுறைக்குத் தம்மைத் தயார் செய்து கொண்டு, அலுவலகத்திலிருந்து சற்று முன்னதாகவே புறப்பட்டு வந்துவிடுவார். கண்ணின் கீழ் ஒரு கருக்கம். முதுகில் இலேசான கூனல். 'பொல்'லென்று வெளுத்த தலைமயிர். அந்தச் சிரிப்பில் மட்டும் தனியாக ஒரு களை.

''என்ன, இன்று ஏகமாக வாங்கிவிட்டீர்கள்?'' என்று விளையாட்டாகக் கேட்டாள்.

''என்ன செய்வது அம்மா? வீட்டுப் பொறுப்பு என் தலையில். பையன் இன்னும் விளையாட்டுப் பிள்ளை. ஒரு நாள் என் வீட்டுக்குத்தான் வந்து பாரேன்.''

ஒரு நாள் அவருடைய வீட்டுக்குப் போய்ப் பார்க்க வேண்டும். அவளிடம் ஒரு பெண்ணைப் போல் பரிவு காட்டும் அந்த மனிதர் எப்படித்தான் வாழ்க்கை நடத்துகிறார் என்று தெரிந்து கொள்ள வேண்டும். அவருடைய விளையாட்டுப் பிள்ளையையும் சந்திக்க வேண்டும். என்ன வயது இருக்குமோ?

**''பி**ல் பிளீஸ்!'' கையில் ஹெரால்ட் ராபின்ஸ் நாவலுடன் நின்றான் அந்த வாலிபன். ''அறிமுகம் இல்லாதவனைக் காதலிக்காதே!'' புத்தகத்தின் தலைப்பைப் பார்த்ததும் தலையைக் குனிந்து கொண்டாள்; 'பில்'லை எழுதும்போது சர்க்கரை போடாத, நன்றாகக் காய்ச்சாத பால்போல் ஒரு புன்னகை தவழ்ந்தது. அந்த விஷமப் பார்வை அவள் முகத்தையே உற்றுப் பார்ப்பது போல ஓர் உணர்வில் கிளர்ந்து எழுந்த கூச்சம். தலையை நிமிர்த்திப் பார்க்கவில்லை.

பணம் கொடுத்துவிட்டு வரப் போனான் அந்த இளைஞன். புத்தகத்தைக் காகித உறைக்குள் எடுத்துப் போட்டபடி, மிடுக்காய் நடந்து போன அவனைக் கவனித்தாள் சித்ரா. பெல்பாட்டம் சராய். அகலமான பட்டை பெல்ட். கன்னத்தில் கேள்விக் குறியாக இறங்கிய ஸைட் பர்ன்ஸ். அந்த இளமைத் துடிப்புக்கு ஏற்றது போல அந்தப் புத்தகம்.

இது வேறு உலகம். இளைஞனுக்கே உரியதான, நாளையைப் பற்றிய கவலையே இல்லாத உலகமா? இறங்கி அவன் போன பின் ஜன்னல் வழியாகக் கவனித்தாள். குலுங்கச் சிரித்தபடி அவனோடு நாகரிகத்தின் அன்றைய அடையாளமாய், வாலிபனைப் போல் ஆடை அணிந்த ஒரு பெண் கைகோத்துச் செல்வது தெரிந்தது.

வேலை முடிந்து வெளியே வந்தபோது பஸ்ஸுக்காக 'க்யூ' மலைப் பாம்பைப் போல் நீண்டு கிடந்தது.

''இன்னும் போகவில்லையா அம்மா நீ?''

அந்த மனிதர்தான். எதிர்ப்புறம் சாலை ஓரமாக அவருடைய கார் நின்றுகொண்டிருந்தது. ''இதோ பஸ் வந்துவிடும். நீங்கள் இன்னும் போகவில்லையா? அப்போதே புறப்பட்டீர்களே?''

''இல்லை. நான் பிருத்விராஜ் அவின்யூ வரை போவேன். நீ வேண்டுமானால் அங்கே வந்து இறங்கிக் கொள்ளேன். அங்கிருந்து சௌகரியமாகப் பஸ் கிடைக்கும்.''

''உங்களுக்குத் தொந்தரவு இல்லையே?'' என்று குடையையும் கைப் பையையும் கைக்கு ஒன்றாக எடுத்துக்கொண்டு கிளம்பினாள் சித்ரா. சாலையை விட்டுக் கண்ணை எடுக்காமல், வழி நெடுக மெதுவாய்த் தம் கதையைச் சொல்லிக் கொண்டு வந்தார் அந்தப் பெரியவர். மத்திய அரசாங்க அலுவலகத்தில் நல்ல பதவியில் இருந்து ஓய்வு பெறப் போகிறார். இன்னும் ஓர் ஆண்டுகூட இல்லை. மனைவி மறைந்து போய் எட்டு ஆண்டுகள் ஆகிவிட்டன. சொல்லும் குரலிலேயே அவர் தம் மனைவியை அருமையாக நடத்திய பரிவு தெரிந்தது. இத்தனை நாட்களாகியும் பிரிவின் உருக்கம் மாறவில்லை. மனத்தில் இன்னும் பசுமையாக இருந்தது அந்த நினைவு.

அவள் காட்டி வந்த அன்பும், அவளுக்குப் பிறகு அவரால் கண்டித்து வளர்க்க முடி

யாமல் போனதும், பையனைச் சரியான முறையில் வளர விடத்தான் இல்லை. விளையாட்டுப் பிள்ளையாகவே இருந்தான். குடும்பப் பொறுப்பு இன்னும் அவருடைய சுமையாகவே நின்று கொண்டிருந்தது. மேலே அதைப் பற்றி அவர் சொல்லு முன் பிருத்விராஜ் அவின்யூ வந்துவிட்டது. அவள் இறங்கிக் கொண்டாள். கதவை மூடுமுன் தம்முடைய வீட்டு விலாசத்தைச் சொன்னார் அவர்.

''வீட்டுக்கு வாயேன் ஒரு தடவை. உன்னிடம் பேசினால் எனக்கும் ஓர் ஆறுதலாக இருக்கிறது.''

அவள் புன்சிரிப்புடன் கை குவித்து விடைபெற்றுக் கொண்டாள். மனம் ஏதோ ஒரு பாட்டை முனக, பஸ் நிற்குமிடத்தை நோக்கி நடந்தாள். சட்டென்று ஒரு கை வெறுமையாக இருந்தது புரிந்தது. குடையைக் காரிலேயே விட்டு விட்டாள். இப்போது அவருடைய வீட்டுக்குப் போய்த்தான் ஆகவேண்டும். அவர் சொன்ன வீட்டு விலாசத்தைத் திரும்பவும் சொல்லிப் பார்த்துக் கொண்டாள்.

அன்று விடுமுறை நாள். கையில் பிஸ்கட் பொட்டலத்தையும் எடுத்துக் கொண்டு மெதுவாக அந்த வீட்டின் முன் வாசலில் அடி எடுத்து வைத்தாள். அவருடைய பெயர் கதவில் பிளாஸ்டிக் எழுத்துக்களில் மின்னிற்று. விலாசம் சரிதான். கொஞ்சம் தைரியமாக மணி அடிக்கும் பொத்தானை அழுத்தினாள் சித்ரா.

கதவு திறந்தது. அங்கே நின்றவன் அன்று 'சூபர் மார்க்கெட்'டில் அவளிடம் புத்தகம் வாங்கிக்கொண்ட அதே வாலிபன். கையிலிருந்த அந்தப் பிஸ்கட் பொட்டலம் நழுவிக் கீழே விழுந்தது. அவருடைய பெயரைச் சொன்னபடி குனிந்து எடுத்தாள் அவள்.

''ஆமாம்! அவர் வெளியே போயிருக்கிறார். நான் அவருடைய பையன்!'' அவன் அப்படித் தன்னை அறிமுகம் செய்துகொண்டதும் அவளுக்கு உடல் குறுகுறுத்தது. இவன் தானா அவருடைய மகன்? விளையாட்டுப் பிள்ளை என்று சொன்னது இவனைத்தானா? கான்வென்ட்டுக்குத் தோளில் பை தொங்க, முன் மயிரை விரலால் தள்ளியபடி பஸ் ஏறும் ஒரு பதினான்கு வயதுப் பையனை, அவளாக எப்படிக் கற்பனை செய்து கொண்டாள்?

''உள்ளே வரலாமே?''

அவள் கால்கள் உள்ளே போகத் தயங்கின. அன்று ஜன்னல் வழியே அவள் பார்த்த காட்சி மீண்டும் மனத் திரையில் தெரிந்தது. அந்த இளம் பெண்ணுடன் நெருங்கி உராய்ந்தபடி அவன் போன விதம்? இப்போது அவ



னுடைய தந்தையின் மனக் குறையின் முழுப் பொருள் அவளுக்குப் புரிவது போல இருந்தது. உள்ளே போகலாமா? வீட்டில் யாரும் இல்லை அப்போது.

''என் குடையைக் காரில் வைத்துவிட்டேன். திரும்ப எடுத்துப் போகலாம் என்று வந்தேன். ஒரு அவசரம்...''

''ஓ, உங்களுடையதுதானா அது? அப்பா சொல்லிக் கொண்டிருந்தார். உங்களைப் பற்றி—''

என்ன சொல்லிக் கொண்டிருந்தார் அவளைப் பற்றி? அவன் குடையை எடுத்துக் கொண்டு வரும்வரை சோபாவின் விளிம்பில் அமைதியின்றி உட்கார்ந்துகொண்டிருந்தாள்.

குடையை வாங்கிக் கொண்டு அவன் புறப்பட்டதும் அவன் முகம் போன விதத்தைப் பார்த்துவிட்டு, மனத்துள் சிரித்தபடி அவள் தெருவில் இறங்கி நடக்கத் தொடங்கினாள்.

அன்று சனிக்கிழமை. வழக்கம்போல் சூபர் மார்க்கெட்டுக்கு வந்திருந்தார் அவர். அன்று அவருடைய கையில் சாமான் பொட்டலங்கள் இல்லை. அவளைப் பார்க்க வேண்டும் என்றே வந்தவரைப் போல, அவளிடம் நேராக வந்து நின்றார்.

''வீட்டுக்கு வந்திருந்தாயாமே? பையன் சொன்னான்.''

பையனா அவன்?

''நான் இல்லாமற் போய்விட்டேன். நீ ஒரு நிமிடம் உட்காரக்கூட இல்லை என்று சொன்னான் ஆனந்த்.''

என்ன தைரியத்தில் உட்காருவதாம்?

இரண்டு நிமிடங்கள் பேசிவிட்டு அவர் புத்தக 'ஷெல்பை' நோக்கி நகர்ந்தார். அவருடைய பார்வை வாசலையே கவனித்துக் கொண்டிருந்தது. யாருடைய வருகையையோ எதிர்பார்ப்பதைப் போல. சட்டென்று அந்த உருவம் தெரிந்தது. அவள் சிரித்து நிமிர்ந்து நின்றாள். புடைவைத் தலைப்பை இழுத்து இடையில் செருகிக்கொண்டாள். எதையோ சமாளிக்கத் தயாராவதைப்போன்ற பாவனை. அப்பாவும் பிள்ளையுமாக வந்து அவளுக்கு எதிரே நின்றார்கள்.

''அரை மணி நேரம் ஆகும் நாங்கள் புறப்பட்டுப் போக. உங்கள் 'டியூட்டி' முடிந்து விடுமே அதற்குள்? எங்களோடு வருகிறீர்களா?'' என்று கேட்டான் ஆனந்த்.

''இன்றைக்கு வருவதற்கு இல்லை!'' முறுக்கேறிய வீணைத் தந்தியைப் போல் இருந்தது அவளுடைய குரல்.

''ஏன்? வைத்து மறந்து போகக் குடையைக் கொண்டு வரவில்லையோ?''

அவன் சிரிப்புடன் அவருடைய சிரிப்பும் கலந்து கேட்டது. ''மிஸ் சித்ரா! அவன் அப்படித்தான் விளையாட்டாகப் பேசுவான். நீ ஒன்றையும் 'சீரியஸா'க எடுத்துக் கொள்ளாதே!'' அவளைச் சமாதானப்படுத்துவது போல அவர் குரல் இழைந்தது.

அவள் காதோரம் கோப ரத்தம் குறுகுறுத்தது.

''இல்லை, இல்லை. அவர் வழக்கமாக வாங்கும் ஹெரால்ட் ராபின்ஸ் நாவலை இன்னும் வாங்கவில்லை. அவருக்குத் துணையாக வந்து சேரும் பெண் இன்னும் வரவில்லை. நான் எவ்வளவு நேரம் காத்திருக்க முடியும்?''.

அவள் பேச்சைக் கேட்டு அவன் அதிர்ந்து போனான். அவருக்கும் கூட வியப்புத்தான். ஆனால் இலேசான மகிழ்ச்சி கலந்த வியப்பு. அந்தப் பார்வை அவள் அவனை அப்படி மட்டந்தட்டிய விதத்தை வரவேற்பது போலவும்கூட இருந்தது.

இருவரும் கிளம்பி விட்டார்கள்.

ஒரு வாரம் ஆகியிருக்கும். கைப் பையைத் தோளில் மாட்டிக் கொண்டபடி ஒரு துள்ளுத் துள்ளி வெளியே படி இறங்கி வந்தாள் சித்ரா. அவளுக்காகக் காத்திருந்தவனைப் போல மளமளவென்று அவளை வழி நடத்திக் காரில் ஏற்றிக் கதவை மூடினான் ஆனந்த். கோபத்தோடு கீழே இறங்க நினைத்தாள். ஆனால் மனம் இடம் தரவில்லை. குரலில் மட்டும் ஒரு கடுகடுப்பை வரவழைத்துக் கொண்டாள்.

''ஒரு பெண்ணை இப்படிக் கட்டாயப் படுத்தியா ஏற்றிக்கொண்டு போவது?'' சித்ராவுக்கு மூச்சு வாங்கியது.

''என்ன தண்டனை கிடைத்தாலும் பரவாயில்லை. அப்பாவுடன் காரில் போய் இறங்கலாம். நான் மட்டும்—''

''அட பாவமே!'' என்று சிரித்துக்கொண்டாள் சித்ரா. ''சரி, என்னை வீட்டில் விட்டு விடுங்கள்.''

''ஆகட்டும். ஆனால் ஒரு நிபந்தனை. வருகிற ஞாயிற்றுக் கிழமை சாயங்காலம் நீ என்னோடு வருகிறாய்...''

''அப்பாவுமா?''

''சில இடங்களில் அப்பாவுக்கு அனுமதி இல்லை'' என்றான் ஆனந்த். முகத்தில் கேள்விக் குறியுடன் அவனை நிமிர்ந்து பார்த்தாள். ஆனால் அவனைக் கோபித்துக் கொள்ள அவளுக்கு மனம் வரவில்லை. போய்த்தான் பார்க்கலாமே? இவருக்குத் தந்தைக்குச் செய்ய வேண்டிய கடமையைக் கொஞ்சம் மனத்தில் பதியும்படி சொல்ல ஒரு சந்தர்ப்பம் கிடைக்கலாம்...

ஞாயிற்றுக்கிழமை. தயாராக நின்று கொண்டிருந்தாள் சித்ரா. மழையில் நனைந்து சிலிர்த்த புது மலரைப்போல முகத்தில் ஓர் எளிமை. சிரமப்படாமல் செய்து கொண்ட அலங்காரம். கதவைத் திறந்து விடும்போது அவனுடைய கண்கள் அவள்மேல் திருட்டு வெள்ளோட்டம் விட்டன.

கன்னாட் சதுக்கத்தின் திறந்தவெளி ஹோட்டல். வண்ணக் குடை விரிக்கும் பெரிய நீரூற்று. பல்வேறு உடைகளில், நாகரிகங்களில் கைகோத்து உலாவிய ஜோடிகள். அவர்களை எதிர்பார்த்து அமர்ந்திருந்தார்கள் ஷீலாவும் சந்திரனும். அவனைக் கண்டதும் கையை உயர்த்தி ஆட்டினாள் ஷீலா. மணிக்கட்டு வரை நீண்ட மேல் சட்டையும், பூக்குடை போல் விரிந்த இடுப்பும், கீழே பெல் பாட்டமும் —

# ஒரே ஒரு காசு செலவில் 1 சேலை அல்லது 3 சட்டைகள் பனிபோல் வெண்மை பெற...

# மாக்ஸிம்*

எல்லா துணிகளுக்கும்
உகந்த ஏற்றமிகு ஒயிட்னர்

**எவ்வளவோ சிக்கனமானது!**

எந்த ஆடையாக இருந்தாலும் சரி, அதற்குப் புத்தம் புதிய வெண்மை ஒளியேற்ற சராசரி ஒரு துளி மாக்ஸிம் போதும். ஒவ்வொரு மாக்ஸிம் பாட்டிலும் சுமார் 1200 துளிகள் கொண்டது என்பது உங்களுக்குத் தெரியுமோ என்னவோ! எனவேதான் மாக்ஸிம் மிகவும் சிக்கனமான, வீரியமுள்ள, நீலநிற திரவ வடிவ ஒயிட்னராக விளங்குகிறது. மேலும் விசேஷ ட்ராப்பர் மூடிகொண்ட பிளாஸ்டிக் பாட்டிலாக இருப்பதால், இன்னும் லாபம். ஏனெனில் தேவைக்கு மேல் ஒரு துளி கூட சிந்தாது. எனவே துளியும் வீணாவதில்லை. துணியும் நீலம் படிவதில்லை.




**எல்லா துணிகளுக்கும் ஏற்றது**

எல்லாவித துணிகளுக்கும் நீங்கள் மாக்ஸிம் உபயோகிக்கலாம். 'டெரீன்' 'டெரீன்'/காட்டன், நைலான், உல்லன் சில்க் மற்றும் காட்டன் போன்ற எல்லா துணிகளுக்கும் மாக்ஸிம் வெண்மையூட்டி புதிய மெருகேற்றுகிறது. தவிர, மாக்ஸிம் துணியில் கறை ஏற்படுத்துவதுமில்லை.

**உபயோக முறை மிகமிக எளிது**

மாக்ஸிம் உபயோக முறை மிகமிக் எளிதானது. துணிகளை முதலில் சோப் அல்லது பிற சலவைச் சாதனங்கள் மூலம் சுத்தமாக துவைத்து நன்கு அலசி எடுக்கவும். பிறகு வாளியிலுள்ள (5 லிட்டர்) நல்ல தண்ணீரில் 10-15 துளிகள் மாக்ஸிம் விட்டுக் கலக்கவும். (பழுப்பேறிய துணிகளென்றால் கொஞ்சம் கூடுதல் துளிகள் மாக்ஸிம் சேர்க்கவும்) பின்பு துணிகளை 10—15 நிமிடங்களுக்கு அதில் ஊறவைக்கவும். மீண்டும் அலச வேண்டாம். அப்படியே உலரவிடவும்.






ஒவ்வொரு காசுக்கும் உரிய பலனைத் தருகிறது மாக்ஸிம்

GHM-33 TAM

*Regd. T.M. Geoffrey Manners & Co., Ltd.

ஆனந்தின் கை நீண்டது. விரல்களைப் பிடித்துக் குலுக்கினாள் ஷீலா. அதைப் பார்க்க என்னவோபோல் இருந்தது சித்ராவுக்கு.

''ஷீலா ஒரு ஏர்ஹோஸ்டெஸ்.'' என்று அவளைச் சித்ராவுக்கு அறிமுகப்படுத்தினான் ஆனந்த். பக்கத்தில் நின்ற சந்திரனை அறிமுகம் செய்தபோது முன்ஜாக்கிரதையாகத் தன் கைகளைக் குவித்து ஒதுங்கிக் கொண்டாள் சித்ரா.

கொஞ்ச நேரம் ஆகி இருக்கும். ஆனந்த் அவளிடமே பேசிக் கொண்டிருந்தான். சித்ராவுக்குச் சந்திரனிடம் சரளமாகப் பேசத் தயக்கம். அந்த நால்வரில் தான் மட்டும் பொருந்தாமல் ஒதுங்கி நிற்பதைப் போன்ற ஓர் உணர்ச்சி அவளை அலைக்கழித்துக் கொண்டிருந்தது.

இருக்கட்டும். அவனுக்கு மட்டும் தெரியாதா ?

''உங்களுக்கு 'ஷாப்பிங்' ஏதாவது இருக்கிறதா மிஸ்டர் சந்தர்?''

'' ஏன்? உங்களுக்கு ஏதாவது வேண்டுமா? இன்றைக்கு இங்கே விடுமுறை. தேவையானால் கரோல்பாக்கிற்கு, அஜ்மல்கான் வீதிக்குத்தான் போக வேண்டும்.''

''போய்விட்டு வரலாமே? அவர்கள் பேசிக் கொண்டிருக்கட்டும்....'' என்று எழுந்திருந்தாள். அதைச் சற்றும் எதிர்பார்க்கவில்லை ஆனந்த். முகத்தில் அந்த வியப்பு மாறாமலே அவளை வழியனுப்பினான்.

இருவரும் புறப்பட்டார்கள். கார் கதவின் வழியே ஜிலுஜிலுவென்ற காற்று. அவள் அவன்புறம் திரும்பினாள்.

''என்ன மிஸ் சித்ரா, நான் தெரிந்து கொள்ளலாமா ?''

சட்டென்று திரும்பினான் அவன். ''எதைப் பற்றி ?''

'' வெற்றிதானா உங்கள் முயற்சியில் ? ஆனந்தை வழிக்குக் கொண்டு வந்துவிடலாம் என்ற நம்பிக்கை இருக்கிறதா உங்களுக்கு?''

ஆச்சரியம் ததும்பியது அவள் முகத்தில். ''என்ன தெரியும் உங்களுக்கு?''

'' அவனுடைய தகப்பனார் சொல்லி அனுப்பினார். அவனைத் திருத்துவதானால் அது உங்களால்தான் முடியும் என்ற ஒரே நம்பிக்கை அவருக்கு. அவருடைய திட்டம் வீண் போகவில்லை என்றுதான் எனக்கும் தோன்றுகிறது.....''

என்ன சொல்கிறான் சந்திரன்? ஷீலாவிடம் பழகிய விதத்தைப் பார்த்த பிறகுமா ? அந்த நேரம் அங்கே அவர்கள் இருவரும் என்ன பேசிக் கொண்டிருப்பார்கள்?

'' எனக்கு எதுவும் புரியவில்லை.''

''ஷீலாவிடம் இதே போலத்தான் இப்போது அநேகமாகச் சொல்லிக் கொண்டிருப்பான் ஆனந்த். அவனைக் கேட்கச் சொல்லி இருக்கிறேன்.''

'' உங்களுக்கு ஏன் இந்தத் தடுமாற்றம் எல்லாம் ?''

''தடுமாற்றமா ?'' என்று வியப்புடன் கேட்டான் சந்திரன். ''எனக்கு ஒரு குழப்பமும் இல்லை. எனக்காகக் காத்துக் கொண்டு ஒரு பெண் தினமும் விமானத்தில் பறந்து கொண்டிருக்கிறாள்.''

சந்திரன் புன்சிரிப்புடன் அவளைக் கண் கொட்டாமல் ஒரு விநாடி பார்த்தான். அவள் முகத்திலும் புன்முறுவல் தவழ்ந்தது. ஷீலாவை அவள் எப்படித் தவறாகப் புரிந்து கொண்டு விட்டாள் ?

## விக்கின ராஜனுக்கு ராஜகோபுரம்

சென்னை நுங்கம்பாக்கத்தைச் சேர்ந்த மஹாலிங்கபுரத்தில் எழுந்தருளித் தனது இளையோனுடனும், இராமதாஸனும் ஆஞ்சநேயருடனும் தெவிட்டாத் திருவருள் புரிந்துவரும் நவநிதி செல்வ விநாயகரின் ஆலயத்தில் ராஜகோபுரம் அமைக்க உத்தேசித்து அதற்கான திருப்பணி துவங்கியிருக்கிறது. இத்துடன் இக் கோயில் பிராகாரத்தைத் தளவரிசையிடவும், உலக நாயகியாம் துர்க்கையையும், தக்ஷிணாமூர்த்தியையும், கலியுக வரதனும் குருவாயூரப்பனையும் பிரதிஷ்டை செய்யவும் முடிவுசெய்து திருப்பணி செவ்வனே துவங்கியுள்ளது. பக்த கோடிகள் தங்களால் இயன்ற அளவு நிதி உதவி விநாயகப் பெருமானின் திருவருளைப் பெறுமாறு வேண்டுகிறோம். விலாசம்: நவநிதி செல்வ விநாயகர் பக்தர்கள் சங்கம், மஹாலிங்கபுரம், சென்னை 600034.

★

## ஸ்ரீ ராம சுப்பிரமணிய ஸ்வாமி ஆலயத் திருப்பணி

முருகப் பெருமானும், ஸ்ரீ ராமபிரானும் சேர்ந்து குடிகொண்டிருக்கும் ஆலயம் ஒன்று குரோம்பேட்டையில், பக்தர்களின் பரிபூரண ஒத்துழைப்பால் நூதன முறையில் புதுப்பிக்கப்பட்டுப் பூர்த்தியடையும் தறுவாயில் இருக்கிறது. இவ்வாலயத்துக்கு அஷ்ட பந்தன மகா கும்பாபிஷேகத்தை 2–9–73 அன்று சிறப்பாக நடத்தி வைப்பது என்று தீர்மானிக்கப்பட்டிருக்கிறது. இத் தெய்வீகக் கைங்கரியம் நடைபெற, பக்திமான்கள் தங்களால் இயன்ற பொருளுதவியை அளித்து உதவக் கோருகிறோம். முகவரி: ஸ்ரீ ராமசுப்பிரமணிய ஆலயத் திருப்பணி 147, மெயின் ரோடு, ராதா நகர், குரோம்பேட்டை, சென்னை – 44.

★



டாக்டர்: இந்தாங்க இதில்..... 250 மாத்திரை இருக்கு......தினமும் மூணு வேளை 250ஐயும் இடிச்சு கொட்டிட்டு ஒண்ணொண்ணா பொறுக்கிப் புட்டியிலே போடுங்க.......! உடம்பு தானா சரியாயிடும் !

- க. சிவராமன்

"இன்னும் அஜ்மல்கான் வீதிக்கு 'ஷாப்பிங்'குக்குப் போக வேண்டுமா?"

"வேண்டாம்" என்று தலையை அசைத்தாள் சித்ரா. "என்னை வீட்டில் விட்டு விடுங்கள்."

"சரிதான். ஆனந்த், என்ன செய்வதாம் ?"

"அவர் இத்தனை நேரம் கிளம்பிப் போயிருப்பார். எத்தனையோ நண்பர்கள் அவருக்கு. அங்கே இவ்வளவு நேரம் ஒரு பெண்ணைச் சந்திக்காமலா இருந்திருப்பார் ?"

"ஆனந்தை நீங்கள் இன்னும் புரிந்து கொள்ளவில்லை.... உங்களைக் கெட்டிக்காரப் பெண் என்றல்லவோ நினைத்தேன் ?" — அனுதாபமா கிண்டலா என்று ஆழம் புரிந்து கொள்ள முடியாமல் இருந்தது அவனுடைய குரல்.

கடைசியில் அவன் சொன்னதுதான் சரி. கன்னாட் சதுக்கப் பூங்காவில் அலங்கார வண்ண விளக்கொளியில் நீரூற்று மிளிர்ந்து கொண்டிருந்தது. கன்னத்தில் கை வைத்து அதைப் பார்த்தபடி உட்கார்ந்திருந்தது அந்த உருவம். அவர்கள் போய் நின்றதும் பெருமூச்சு விட்டபடி திரும்பிப் பார்த்த அந்த உருவத்துக்குப் பெயர் ஆனந்த்.

"லீலா எங்கே?"

"அப்போதே கிளம்பிப் போய்விட்டாள். உன்னை நாளைக்குப் பார்ப்பதாகச் சொன்னாள்." ஓரக் கண்ணால் சித்ராவைக் கவனித்தான் ஆனந்த். கைப் பையைச் சிறு ஊஞ்சலாக ஆட்டியபடி, மலர விழித்துக் கொண்டு நின்ற அவளைப் பார்த்த பார்வையில் ஆயிரம் கேள்விகள் குமுறின.

"அப்போது நான் கிளம்பட்டுமா ? சித்ராவை வீட்டில் விட்டுவிட்டு அப்படியே நான் போகிறேன்" என்றான் சந்திரன் குறும்புச் சிரிப்புடன்.

ஒரு நிமிடம் ஒரு திகைப்பு அவனைத் திணற அடித்தது. மறுகணம் அதை மாற்றிக் கொண்டு கோபச் சிரிப்புடன், "உன் 'பிஸினஸை' நீ பார்த்துக் கொண்டு போகலாம் சந்தர் !" என்றான். அந்தக் குரலில் தான் என்ன வேகம் ? மனக் குமுறல் தெரியும் படத்தாறும் ?

"என் மேல் ஏன் சீறுகிறாயாம்? சித்ரா என்னிடம் கேட்டுக் கொண்டதை நான் சொன்னேன். எனக்கு என்னப்பா உங்களுக்கு இடையே ? நான் வருகிறேன்" என்று புறப்பட்டான் சந்தர். ஆனந்தின் கண்களில் இன்னும் அந்தப் பொறாமைக் கனல் தணிந்த பாடில்லை. அவளையும் சீண்டிற்று அது.

அவனைப் பார்த்தபடி சிரிப்பு மாறாமல் நின்ற அவளை நிமிர்ந்து பார்த்தான் ஆனந்த். அந்த வண்ண ஒளியில் செதுக்கின உடலின் கட்டும் உறுதியும் பளிச்சென்று தெரிந்தன. இளநீல நிறப் புடவையும், நீல நிறச் சோளியும், காதில் தொங்கிய நீலக் கட்டமும், சொட்டு மேகம் இல்லாத வானத்தின் வெளிர் நீலத்தில் ஒன்றி நின்றன; நிலவில் பொலிந்தன.

"நாமும் போவாமா ?" என்று கேட்டாள் சித்ரா. ஆனந்த் பதில் சொல்லவில்லை. இன்னமும் ஏதோ குமுறிக் கொண்டிருந்தது அவனுக்குள்.

காரில் ஏறி அமர்ந்ததும் மறுபடியும் கேட்டாள். "இன்னும் கோபம் போகவில்லை போல இருக்கிறது ?" அவன் கவனத்தைப் பிடிவாதமாக இழுக்கும் குரல்.

"நானும் கவனிக்கிறேன். உன்னை முதன் முதலில் அன்று புத்தகமும் கையுமாகச் சந்தித்தது முதல் நானும் தவித்துக் கொண்டிருக்கிறேன். மற்றவர்களிடம் காட்டும் நயத்தையும் மென்மையையும்கூட என்னிடம் காண்பிப்பதில்லை......"

"பின்னே ?"

"என்னிடம் ஏன் இப்படிச் சண்டை பிடிக்கிறாயாம் ?"

"வேறு யாரிடம் நான் சண்டை பிடிப்பதாம் ?"

அந்தக் கண் சிமிட்டலைத் திரும்பிக் கவனித்தான் ஆனந்த். திடீரென்று அவன் கண்கள் காணும் ஒளி பெற்றவைபோல் விரிந்தன. அவள் கையை நாடி, விரலோடு விரல் பின்னி இழுத்துத் தன் மார்பின் மேல் வைத்துக் கொண்டான்.

"ஒற்றைக் கையால் கார் ஓட்டுகிறீர்கள். இங்கே இப்போது ஒரு விபத்து நேரப் போகிறது."

ஆனந்தின் தந்தை வேலையிலிருந்து ஓய்வு பெற்று வீட்டுக்கு வந்துவிட்டார். இன்னும் அவருடைய பழைய குறை தீர்ந்தபாடில்லை. வீட்டைச் சித்ரா பொறுப்பேற்றுக் கவனித்துக் கொண்டாலும், பெரும்பாலும் அவர் துணை இல்லாமல் தனியாகத்தான் உட்கார்ந்து கொண்டிருக்கிறார். ஆனால் அந்தத் தனிமை ரொம்ப நாளைக்கு இல்லை. துணைக்கு ஒரு பேரக் குழந்தை வந்து சேருவதோடு, அதைக் கவனித்துக் கொள்ளும் புதிய வேலையும் கிடைத்துவிடும் அவருக்கு !

# ஞானக்குயில்

ஜெகசிற்பியன்

## 19. இரு தேவதைகள்

ஏற்கனவே மனம் தெறிக் கிடந்த சுகந்தி இப்போது கண்ணம்மாவைப் பற்றித் தோட்டக்கார ராயப்பன் சொன்னதைக் கேட்டு ஒரேயடியாகக் கலங்கிக் குழம்பியவளாய்ப் பேந்தப் பேந்த விழித்தபடியே, ''ஏன் ராயப்பா! இந்தப் பெண் எதற்காக இங்கே வந்து மடத்திலே சேரணும் என்கிறாள்?'' என்று மெல்லிய குரலில் வினவினாள்.

ராயப்பனுக்குச் சிரிப்பு வந்துவிட்டது. ஆடு தும்முவதுபோல் சிரித்த அவன், ''என்னம்மா, இதையெல்லாம் கேட்டுத் தானா தெரிஞ்சுக்கணும்? இதோ இருக்குதே இந்த மடத்து மதில் சுவர், இதைத் தட்டிக் கேட்டால்கூட என்னைவிடத் தெளிவாகச் சொல்லிவிடுமே! என்ன, எத்தனையோ காலம் காலமாய் இம்மாதிரி இங்கே ஓடி வரும் பெண்களின் சோகக் கதைகளை அது கேட்டுக்கிட்டிருக்குது!'' என்றான் பாமரத்தனமான ஒரு கேலிக் குரலில்.

சுகந்தி அணிந்திருந்த ஒரு முழுக்கை ரவிக்கையையும் கறுப்புப் புடவையையும் பார்த்து அவள் அந்த மடத்தைச் சேர்ந்தவளாயிருக்கக்கூடும் என்று ஊகித்துக் கொண்ட கண்ணம்மா தயங்கித் தயங்கிச் சற்று முன்னால் வந்து, ''அக்கா! நீங்களாவது என்னை உங்க மடத்திலே சேர்த்து விட உதவி பண்ணுங்களேன்?'' என்று பாதி அழுகையும் பாதி கெஞ்சலுமாகக் கேட்டாள்.

சுகந்திக்குச் சிரிக்க வேண்டும் போல் இருந்தது. ஆனால் அழுகை தான் அவளது தொண்டையில் முட்டியது: 'என்ன விந்தையான உலகம் இது! நான் இந்த மடத்து வாழ்க்கையே வேண்டாம் என்று வெறுத்து உதறி விட்டு வெளியே ஓடி வருகிறேன்; இவளோ இது தான் வேண்டும் என்று இதன் உள்ளே போகத் துடிதுடித்துக் கொண்டு நேற்றுக் காலை முதல் இந்த நேரம் வரை இங்கேயே பழியாய்க் காத்துக் கிடக்கிறாள்! ஒவ்வொரு மனிதரின் விதியும் ஒன்றுக் கொன்று ஒட்டி வராத இத்தனை கோரமான வெடிப்புத் துண்டங்களாகவா அமைய வேண்டும்?' அவள் பதில் ஏதும் சொல்லாமல் மௌனமாய் நின்றாள்.



''அது சரி; நீ மெட்ருஸா, வெளியூரா?'' என்று ஏதோ யோசனையில் கேட்டான் ராயப்பன்.

''மாயவரத்திலேயிருந்து வரேனுங்க!''

''இந்த ஊரில் உனக்கு யாரும் இல்லையா ?''

''என் அம்மாவும் அண்ணுவும் இங்கேதான் இருக்கிறுங்க.''

''அப்போ, அங்கே ?''

''மாமா வீட்டில் இருந்தேன். அவர் தான் என்னை வளர்த்தார்.''

''பின்னே எதுக்கு இங்கே வந்தே ?''

''மாமா வீட்டார்கிட்டே கோபிச்சுக்கிட்டு வந்துட்டேன்.''

''ஓ..... அப்படியா? சரி; உன் அம்மாவும் அண்ணனும் இந்தப் பட்டணத்திலே இருக்கிற தாகச்சொல்றயே?''

''தெரியாது தானுங்க. நான் இதற்கு முன்னடி இந்தப் பட்டணத்துக்கு வந்ததில்லே.''



''ஆமாங்க ! அவங்ககிட்டப் போக ணும்னுதான் வண்டியேறி வந்தேன். ஆனுல் அவங்க இருக்கிற இடம் தெரியல்லே.''

''என்னம்மா இது, கதை சொல் லறே ! உன் அம்மா, அண்ணன் வீட்டு விலாசம்கூடவா உனக்குத் தெரியாது?''

''கடிதாசிகூட எழுதறது கிடை யாதா ?''

''அதற்கெல்லாம் என் அத்தை என்னை விடறது இல்லீங்க எப்பவாச்

கும் அம்மா ஊருக்கு வந்து பார்த்து விட்டுப் போவாங்க.''

''சரி; உன் மாமா வீட்டார்கிட்டே கோபிச்சுக்கிட்டு அம்மாவிடம் போயிட லாம்னு நீ நினைச்சப்ப அவங்க விலாசத் தைக் கையோடு கொண்டுகிட்டு வரணும்னு உனக்குத் தோணலியா?''

''நான் செய்த பெரிய தப்பு இது தானுங்க! என்னமோ ஆத்திரத்திலே யும் கோபத்திலேயும் ஓடி வந்தப்ப இதை நினைச்சுப் பார்க்கலே. எங்க ஊர் மாதிரி இந்த ஊரையும் நினைச்சுக்கிட் டேன். அங்கே வழி விலாசம் தெரியாமல் வந்துட்டவங்க,' யாரைக் கேட்டாலும் பொறுமையா நின்னு விவரம் விசா ரிச்சு, தங்கள் நேரம் வீணாகுதேன்னும் கவலைப்படாம உதவி செய்வாங்க. இங்கே என்னடான்னா, யார்கிட்டே எது கேட்டாலும் போகிற போக்கிலே சும்மா கையைக் காட்டிட்டோ, தலையை ஆட்டிட்டோ போறாங்க. இரண் டொருத்தர் நின்னு கேட்டாலும் அவங்க கேட்கிற கேள்வியும் பார்க்கிற பார்வையும் சிரிக்கிற சிரிப்பும் என் னமோ மாதிரி இருக்குது....''

'ஐயோ, அசட்டுப் பெண்ணே!' என்று அவளுக்காக அநுதாபப்பட் டுக்கொண்ட ராயப்பன், ''ஆமாம்; நீ இங்கே வந்து எத்தனை நாட்க ளாகுது?'' என்று விசாரித்தான்.

''நேத்திக்குக் காலம்பற வந்தே னுங்க. ரயிலடியை விட்டு வெளியே வந்ததும் எனக்கு ஒரே பிரமிப்பா யிடுத்து. அங்கேயே கொஞ்ச நேரம் உட்கார்ந்து இருந்துட்டு அப்புறம் கால் போன போக்கில் தெருத் தெருவா, சாலை சாலையா நடந்தேன். என் அம்மா பேரையும், அண்ணா பேரை யும் சொல்லி யாராரிடமோ கேட் டேன். என் அண்ணா பி. காம்., படிச்சவர். அவரைக்கூட இங்கே இருக்கிறவங்களுக்குத்தெரியலே...''

ராயப்பன் 'குபுக்' கென்று சிரித்து விட்டான். ''நீ என்ன படிச்சிருக்கிறே?'' என்று சிரித்துக் கொண்டே கேட்டான்.

''ஆறாம் கிளாஸ் வரையில் படிச்சேன். அதுக்கு மேல் வேணாம்னு என் அத்தை நிறுத்திட்டாங்க.''



''சரி; அப்புறம் ?''

''பொழுது இருட்டிப் போயிடவே, வந்த வழியா ஸ்டேஷனுக்குத் திரும்பி விடலாம்னு நினைச்சேன். அந்த வழியும் எனக்குத் தட்டுக் கெட்டுப் போச்சு. ஒரு தெரு மூலையிலிருந்த கோயில் மண்டபத்திலே காலட்சேபம் நடந்துக்கிட்டு இருந்தது. அங்கே போய்க் கூட்டத்தோடு ஒருத்தியாய் உட்கார்ந்துட்டேன். எனக்கு ரொம்பக் களைப்பாயிருந்தது. என் அதிர்ஷ்டம், அந்தப் பாகவதர் விடிய விடியக் கதை சொல்லி மூன்றரை மணிவாக்கில் காலட்சேபத்தை முடிச்சார். மண்டபத் தூணிலே சாய்ஞ்சபடி நல்லா தூங்கிக்கிட்டு இருந்த நான் திடுக்கிட்டுக் கண் விழிச்சு, வெளியே போன பெண்கள் கூட்டத்தோடு சேர்ந்து நடந்தேன். ஒவ்வொருத்தரா பிரிஞ்சு போய்க் கடைசியாக ரெண்டு கிழவியம்மாங்க மட்டும் ஒரு சாலையிலே போனாங்க. அவங்க பின்னாடியே நானும் போனேன். கொஞ்ச தூரத்துக்கப்புறம் அவங்களும் ஒரு வீட்டிலே நுழைஞ்சுட்டாங்க. ரோட்டில் தனியாக நின்ன எனக்குப் பயமாயிட்டது. ஓட்டமும் நடையுமாக நடந்தேன். அந்த ரோடு இந்தக் கன்னிகா மடம் இருக்கிற இடத்திலே வந்து முடிஞ்சுட்டது. அதோ தெரியுதே ஒரு மாடிக் கட்டடம், அதிலே அப்ப விளக்கு எரிஞ்சுக்கிட்டு இருந்தது. உள்ளே, கன்னிகா ஸ்திரீகள் வரிசை வரிசையா உட்கார்ந்து பிரார்த்தனை பண்ணிக்கிட்டு இருந்தாங்க. விளக்கு வெளிச்சத்தையும் பெண்கள் கூட்டத்தையும் பார்த்ததால் எனக்குக் கொஞ்சம் தைரியம் ஏற்பட்டது. நேரே போய் மடத்து வாசலண்டை உட்கார்ந்துட்டேன். எங்க ஊரிலேயும் என் வீட்டுக்கு மேலண்டைப் பக்கம் இம்மாதிரி ஒரு மடம் இருக்குது. அங்கே எத்தனையோ அநாதைப் பெண்கள் சந்தோஷமாகவும் நிம்மதியாகவும் இருக்கிறதைப் பார்த்திருக்கிறேன். முன்பின் யோசிக்காமல் ஊரை விட்டு ஓடி வந்துட்ட நான், இனிமேலும் என் அம்மா அண்ணா இருக்கிற இடத்தைத் தேடிப் பிடிக்கப் போய்ச் சேருவேங்கிற நம்பிக்கையை இழந்துட்டேன்; அப்படி ஓர் அசட்டு நம்பிக்கையில் இன்னமும் இவ்வூரைச் சுற்றினால் எதனுைக்கும் பெரிய சங்கடத்தில் அகப்பட்டுக்குவேன்னும் புரிஞ்சுக்கிட்டேன். அதனால்தான் இந்த அநாதை மடத்தில் சேர்ந்துடறதுன்னு முடிவு பண்ணினேன். என்னோட கெட்ட காலம் அதுக்கும் இடம் கொடுக்காம இப்படித்தெருவிலே என்னை நிற்க வெச்சு வேடிக்கை பார்க்குது.''

இவ்வளவு நேரம் அவள் சொன்னதை யெல்லாம் கூர்ந்து கேட்டுக்கொண்டிருந்த சுகந்தி, 'உற்றார் உறவினரோடும் ஊர் மக்களோடும் இருந்து கலந்து பழகி வளர்ந்த இவளுக்கே ஒரு புதிய ஊரில் வந்து தன் தாயும் அண்ணனும் இருக்குமிடத்தைத் தேடிக் கண்டுபிடிக்க முடியாமல் இத்தனை துன்ப துயரங்களை அநுபவித்துத் தின்டாடுகிறாள் என்றால், புத்தி தெரிந்த வயது முதல் இந்நாள் வரையில் வெளி உலகமே இன்னதென்று தெரியாமல் இந்த மடத்தின் நான்கு சுவர்களுக்கு உள்ளேயே சிறைக் கைதி போல் வாழ்ந்துவிட்ட நான் இங்கிருந்து தன்னந் தனியாக வெளியே, என் தாய் இருக்கும் இடத்தையோ, இன்று காலை என்னை அழைத்துப் போக வந்த அந்தக் கனவான் வேதமூர்த்தி என்பவரின் வீட்டையோ கண்டுபிடித்துச் சேர்ந்திருப்பேனா ? அவர்கள் எங்கே இருக்கிறார்கள் என்ற விலாச விவரம்கூடத் தெரியாமல் — அவர்களை நேரில் பார்த்தும் இல்லாத நிலையில் — இந்த இரவு வேளையில் அசட்டுத் துணிச்சலுடன் வெளியே போயிருந்தால் என் கதி என்ன ஆகியிருக்கும்?' என்றெல்லாம் எண்ணிப் பயந்து நடுங்கலானாள்.

ஆழ்ந்த சிந்தனைக்குப் பின் ஏதோ ஒரு முடிவுக்கு வந்தவன்போல் மெல்லத் தொண்டையைக் கனைத்துவிட்டுக் கொண்ட ராயப்பன், ''ம்.... சரி : ஆனால் நீ நினைப்பது போல் இந்த மடத்தில் சேர்கிறது அவ்வளவு சுலபமில்லேம்மா ! அநாதைன்னு வருகிற எல்லாரையுமே இங்கே சேர்த்துக் கொள்ள மாட்டாங்க. அதுக்குச் சாட்சி, சிபாரிசு, உன் வீட்டார் சம்மதம் எல்லாம் வேணும். ஏன்னா பின்னால் எதனுச்சும் தொல்லைகள் வரும் இல்லையா? அதனால் இங்கே நீ எத்தனை நாட்கள் காத்துக் கிடந்தாலும் ஒரு பிரயோசனமும் ஏற்படாதுன்னு தான் எனக்குத் தோணுது !'' என்றான் வருத்தம் தோய்ந்த குரலில்.

இதைக் கேட்டு ஒரேயடியாய் நிலை குலைந்து போன கண்ணம்மா விம்மிச் செருமலானாள்.

''இங்கே பார், குழந்தே ! நான் சொல்றபடி கேட்கிறதானால் உனக்கு ஓர் உதவியை என்னால் செய்ய முடியும்......'' என்று இழுத்து நிறுத்தி விட்டு அவள் முகத்தை ஏறிட்டு நோக்கினான் ராயப்பன்.

''சொல்லுங்க, தாத்தா!'' என்று தன் விம்மலை உடனே அடக்கிக்

Prestige

PREETT

# பத்து லட்சத்துக்கும் அதிகமான குடும்பத் தலைவிகள் உபயோகிப்பது பிரஸ்டீஜ்—இந்தியாவில் அதிகம் விற்பனையாகும் பிரஷர் குக்கர்

## காரணம் என்ன?

**அதிகக் கொள்ளளவு:**

பிரஸ்டீஜ் மூடி வெளிப்புறம் பொருந்துவதால், அதிக உணவு சமைக்க நிறைய இடம் கிடைக்கிறது. உள் அடுக்குகள் பெரியவை. காரணம் பிரஸ்டீஜின் கொள்ளளவு வேறு வகை குக்கர்களை விட 1/3 பங்கு அதிகம்.

**அதி வேகம்:**

பிரஸ்டீஜில் உபயோகிக்கப்படும் சிறப்பான அலுமினியக் கலப்பு உலோகம், சீராகவும் விரைவாகவும் சூடு பரவ உதவுகிறது. அதனால் நேரமும் எரிபொருளும் மிச்சம்.

**அதிக பாதுகாப்பானது:**

மூடுவதற்கு இரட்டிப்பு வசதியுள்ள மூடி. மூன்று கட்டங்களில் அமைந்துள்ள பிண்டியுடன் கூடிய ரப்பர் பாதுகாப்பு அடைப்பான், குக்கரை பாதுகாப்பானதாகச் செய்கிறது.

பிரஸ்டீஜ் 6 அளவுகளில் கிடைக்கிறது: வாழ்நாள் முழுவதும் உழைப்பதற்கு உறுதியளிக்கிறது.

உங்கள் பிரஸ்டீஜ் குக்கர் அதிநுட்பமானது. சிறந்த பயிற்சி பெற்ற பழுதுபார்ப்போர் தான் அதை சீராக்க முடியும். விற்பனைக்குப் பிறகும் உங்கள் பிரஸ்டீஜுக்கு விரைவாகவும் தரமாகவும் சீர்பணி புரிய, நாடெங்கும் 200க்கும் அதிகமான ஸர்வீஸ் ஸ்டேஷன்கள் இருக்கின்றன. உத்தரவாதமுள்ள 'ஸ்பேர்' பகுதிகளை பிரஸ்டீஜ்/பிரீத் பணி நிலையங்களிலிருந்தும், பிரபல விற்பனையாளர்களிடமிருந்து மட்டுமே வாங்குங்கள்.



Prestige

PRESSURE

saves time




டிடி. (பிரைவேட்) லிமிடெட், பெங்களூர் 560016

S.A.A./TTP/1008A

# சிந்தால் வாக்குறுதி...

மேனியெழிலுக்கு முழுப் பராமரிப்பு

புதுமை குன்றுத நறுமணம்

துர்நாற்றத்திலிருந்து சிறந்த பாதுகாப்பு

## ...சிந்தால் மட்டுமே நிறைவேற்றக்கூடியது




ஜி-11 அடங்கிய ஒரே சோப் சிந்தால். இந்த அற்புத கிருமி நாசினி உடல் துர்நாற்றத்திற்கும் சருமக்களங்கத்திற்கும் காரணமாக விளங்கும் கிருமிகளை அழித்து விடுகிறது. இவ்வாறு சிந்தால் உங்கள் மேனியெழிலை அப்பழுக்கின்றி வைத்திருப்பதுடன், உங்களை நாள் முழுவதும் புத்துணர்ச்சியுடன் வைத்திருக்கிறது.

Interpub.GSC/5/72R Tam

கொண்டு அடைத்த குரலில் வினவினாள் கண்ணம்மா.

''அதாவது, எழும்பூர் ஸ்டேஷன் வரையில் அழைச்சுப் போய் உன்னோட பயணத்துக்கு ஒரு டிக்கட் எடுத்துத் தருகிறேன். ரயிலேறிப் போயிடறியா?''

இதற்குப் பதிலேதும் சொல்லாமல் மௌனமாய் நின்றாள் கண்ணம்மா. அவளது மனத்தில் பெரியதொரு போராட்டமே மூண்டது.

சாலை விளக்குகள் அப்போது அணைந்ததிலிருந்து மணி நான்கு என அறிய முடிந்தது.

''சொல்லம்மா! எங்களுக்கு நேர மாகுதில்லே?'' என்று அவசரப்படுத்தினான் ராயப்பன்.

''ஆகட்டும், தாத்தா! அப்படியே செய்யறேன்'' என்று கிணற்றிலிருந்து பேசுவது மாதிரி கம்மிய குரலில் முணு முணுத்தாள் கண்ணம்மா.

''சரி; எங்களோடு வா!'' என்று கூறியவாறு அரிக்கன் விளக்குடன் முன்னே நடந்தான் ராயப்பன். அவனுக் குப்பின்னே சுகந்தியும் கண்ணம்மாவும் வானுலகிலிருந்து வழி தப்பி வந்து விட்ட இரு தேவதைகள் போல் தலை குனிந்தபடியே நடக்கலாயினர்.

நரசு ஐந்து மணிக்கெல்லாம் எழுந்து விட்டான். குளிர்ந்த நீரில் குளித்து வந்த பின்னும் அயர்வு நீங்கவில்லை. சன்னலோரம் நாற்காலியில் சாய்ந்த வாறு, வெளியே தோட்டத்தில், மேனி முழுக்கத் திருநீறு அணிந்து ஒற்றைக் காலில் நின்று தவம் இயற்றும் முனிவர்போல் காணப்பட்ட ஒரு கமுக மரத்தை வெறித்துப் பார்த்துக் கொண்டிருந்தான். அவனுடைய மனமோ தண்ணீர் வற்றிய குட்டையில் அங்குமிங்குமாய்த் தவ்விக் குதிக்கும் தவளையைப் போல், பலப்பல விஷயங்களில் உளைய ஆரம்பித்தது.

'பாவம், அந்த அபலைப் பெண் கண்ணம்மாவை அவளின் தாயோ, அண்ணனோ தேடிப் பிடித்து அழைத்து வந்து விட்டிருப்பார்களா? அல்லது இன்னமும் தேடிக் கொண்டுதான் இருப்பார்களா? அவ்வளவு சூட்டிகையான பெண்ணாகவும் இல்லாத அவள் இந்தப் பட்டணத்திலே என்னவெல்லாம் துன்பங்களுக்கு ஆளானளோ?...

'அடடா! என் நண்பன் திருமலை தான் என்மீது எவ்வளவு தப்பபிப் பிராயத்தை ஏற்படுத்திக் கொண்டு விட்டான்! இந்த வேதமூர்த்தியின் வீட்டில் நான் தங்கியிருப்பதையும், அந்தப் பைப் பாரத் கம்பெனியின் உரிமையாளர்களில் அவரும் ஒருவர் என்பதையும் ஏதோ உள்நோக்கத்துடன் அவனிடம் சொல்லாமல் மறைத்து விட்டதாக எண்ணி விட்டானே!

**அன்றும்....!**

கண்டக்டர்: எல்லோரும் முன்னால் நகருங்கள்! இங்கேயே கூட்டம் போட்டால் எப்படி?




**....இன்றும்!**

கண்டக்டர்: எல்லோரும் பின்னால் நகருங்கள்! முன்னால் கூட்டம் போட்டால் எப்படி?

* * * * * * * * * * * * * * * * * * * * * * * * * * * * * * *

அந்தக் கம்பெனியில் வேலைக்கு விண்ணப்பித்துக் கொண்டிருக்கும் அவன், வேதமூர்த்தியிடம் தனக்காகச் சிபாரிசு செய்யும்படி என்னைக் கேட்டுவிடுவானோ என்று அஞ்சி, அவ்விவரங்களை நான் அவனிடம் சொல்லாமல் மறைத்ததாக எண்ணிவிட்டான் போலும்!'

அந்த அறையில் 'குப்'பென்று ரோஜா மலரின் மணம்வீசவே, மெல்லத் திரும்பிப் பார்த்தான் நரசு. வெறுமனே சாத்தியிருந்த கதவைச் சுவாதீனமாகத் திறந்து கொண்டு உள்ளே வந்த மனோகரி, ஆவி பறந்த காப்பியை மேசை மேல் வைத்துவிட்டு, ''காப்பி வர நேரமாயிடுத்தா? நீங்க இவ்வளவு சீக்கிரம் எழுந்திருப்பீங்கன்னு தெரிஞ்சிருந்தா இன்னும் முன்னாடியே எடுத்து வந்துவிட்டிருப்பேன். நாளையிலிருந்து பாருங்க; காப்பிதான் உங்களுக்கு முதல் தரிசனமாயிருக்கும்'' என்றாள் மென்மையான கேலிக் குரலில்.

ரோஸ் நிற ஜார்ஜட் புடவை, ரோஸ் கலர் சோளி, அதே வண்ணத்தில் பிளாஸ்டிக் கைவளைகள், கழுத்தணி, காதணி, தளரப் பின்னிய ஈரக் கூந்தலில் புத்தம் புதிதாகப் பறித்துச் செருகிய ரோஜா மலர் — என்று இவ்வாறு ஒரே 'ரன்னிங் மேட்ச்'சான அலங்காரங்களுடன் எழில் பொங்க விளங்கிய அவளைத் திகைப்பும் கூச்சமுமாக எதிட்டு நோக்கினான் நரசு.

''அதெல்லாம் இல்லை; இன்னிக்குத்தான் இவ்வளவு காலம்பற எழுந்திருச்சிருக்கிறேன். வழக்கமாய் நான் எழுந்திருக்கிறது ஆறு மணிக்கு மேலே தான்'' என்று கூறிக் கொண்டே நிமிர்ந்து உட்கார்ந்தான்.

''அப்படீன்னா நீங்க சரியாகத் தூங்கலேன்னு சொல்லுங்க?''

''ஆமாம். புது இடம் இல்லையா? போகப் போகச் சரியாகிவிடும்.''

''குழந்தைகளுக்கும் வயசானவங்களுக்கும்தான் புது இடத்திலே தூக்கம் பிடிக்காதுன்னு சொல்லுவாங்க!''

## இடம் மாறும்போது....!

உங்கள் விசாலமான மனமும் குறுகிய இடுப்பும் இடம் மாறும் போது உங்களுக்கு வயதாகி விட்டது என்று அர்த்தம்!

லவன் - பாலி

''வாஸ்தவம். இவ்வளவு காலமாய் நான் வீட்டிலே குழந்தையாகவும், வெளியிலே வயசானவனாகவும் இருந்து நடந்து பழக்கப்பட்டுட்டேன்....''

''அதனாலென்ன? இங்கேயும் நீங்க அது மாதிரியே இருக்கலாம்'' என்று கூறிக் குறும்பாகச் சிரித்த மனோகரி ஓயிலாக நடந்து போய் அவ்வறைச் சுவரில் தொங்கிய தினக் காலண்டரிலிருந்து நேற்றைய தேதித் தாளை ஓசையின்றிக் கிழித்தெடுத்துக் கொண்டு கதவை முன்போல் ஒருக்களித்துச் சாத்திவிட்டு மறைந்தாள்.

நரசுவும் தனக்குள் மெல்லச் சிரித்தவாறு காப்பியை எடுத்துப் பருகினான். அந்தக் காப்பியின் மணமும் ருசியும் அவனுக்கு உடனே பாக்கியத்தம்மாளை நினைவூட்டின. அவள் அன்று சொன்னது போல் இவ்வீட்டுக் காப்பி நன்றாகத்தான் இருக்கிறது என்று பாராட்டிக் கொண்டான்.

'ஆனாலும் இங்கு நான் தங்குவது பற்றி அவள் ஒன்றுமே சொல்லாமல் மௌனம் சாதித்தாளே, ஏன்? என் அம்மா சொன்ன மாதிரி அவளுக்கு இவ்வீட்டாரின் மேல் அவ்வளவு நல்ல அபிப்பிராயம் இல்லையென்றால் அதற்குக் காரணம் என்னவாயிருக்கும்?'

இதைத் தொடர்ந்து அவன் மனத்தில் வேறொரு கேள்வியும் எழுந்தது: 'அந்தப் பாக்கியத்தம்மாள் எங்கள் வீட்டிலேதான் வெகுகாலமாய் இருந்து வருகிறாள் என்பது தெரிந்திருந்தும் வேதமூர்த்தியோ, அவருடைய மனைவியோ என்னிடம் அவளைப் பற்றி இதுவரையில் ஒரு வார்த்தைகூடக் கேட்கவில்லையே, ஏன்? அவளுக்கு இவர்கள் மேல் நல்ல அபிப்பிராயம் இல்லாததுபோல் இவர்களுக்கும் அவள் மீது ஏதேனும் வருத்தம் இருக்குமோ?'

சூடான காப்பியின் ஆவி மேலுதட்டில் படர்ந்து வியர்வை அரும்பு கட்டியதைக் கைத் துண்டால் அழுத்தித் துடைத்துக் கொண்ட நரசு, இந்த ஊருக்கு வந்து மூன்று நாட்களாகியும் தன் அம்மாவுக்குக் கடிதம் எழுதாமல் இருப்பது பற்றி இப்போது எண்ணிப் பார்த்தான்.

'நேற்றும் இன்றும் என்னிடமிருந்து கடிதத்தை எதிர்பார்த்து அம்மா ஏமாந்து போவாள். ஏமாறுவதோடு நிற்பாளா? ஓரேயடியாய்க் கவலைப்பட்டு உடம்பை அலட்டிக் கொள்வாள். இல்லாததையெல்லாம் எண்ணிப் பயந்து நடுங்குவாள். அதனால் இப்போதே ஒரு கடிதம் எழுதிவிட வேண்டும். என்ன எழுதுவது? வீட்டை விட்டுச் சென்னைக்கு வந்து சேருவதற்குள் இடை வழியிலே நான் செய்த அதிகப் பிரசங்கித்தனமான காரியங்களையெல்லாம் எழுதலாமா? வேண்டாம். அவற்றால் என்மீது அவளுக்கு வீணான சந்தேகங்கள், அதிருப்திகள் ஏற்படலாம். சரி; இந்த வீட்டிலே காலடி வைத்தது முதல் நேற்றிரவு வரையில் இங்கே நடந்த சம்பவங்களைத் தெரிவிக்கலாமா? நான் இண்டர்வ்யூவுக்குப் போன கம்பெனி மூடிக் கிடக்கும் தகவலை எழுதலாமா? இவற்றை எழுதினால் அவள் ஒரே யடியாய்ச் சோர்வடைந்து போவதோடு என்னை உடனே ஊருக்குப் புறப்பட்டு வந்து சேரும்படியும் உத்தரவிட்டுக் கடிதம் எழுதிவிடுவாள். ஆகவே அவை பற்றி இப்போது எதையும் தெரிவிக்காமல் இருப்பதே நல்லது.'

ஊரிலிருந்து வரும்போதே வாங்கி வந்திருந்த ஓர் இன்லாண்ட் கடிதத்தை அவசரமாக எடுத்து, தான் இங்கு நன்னலத்துடன் வந்து சேர்ந்தது பற்றியும், தனக்கு இவ்வீட்டார் தேவையான எல்லா வசதிகளும் செய்து கொடுத்திருப்பது பற்றியும் நாலே வரிகள் எழுதி — தன் வேலை விஷயமாய் எதுவும் குறிப்பிடாமல் — கடிதத்தை முடித்துவிட்டு, பின் குறிப்பாக, வண்டிக்கார வேலய்யாவுக்கு ஓர் ஐந்து ரூபாய் இனாம் கொடுக்கும்படி சொல்லி, அதற்கான நிஜக் காரணத்தை விளக்காமலே விட்டுவிட்டு விலாசம் வரைந்து ஒட்டி ஜேபியில் வைத்துக் கொண்ட போது, அவனுக்கே அந்தக் கடிதம் ஒரு மகன் தன் தாய்க்கு எழுதும் அந்நியோன்யக் கடிதமாக இல்லை என்பது புரியத்தான் செய்தது. ஆனாலும் அதற்கு மேல் அதில் விவரங்கள் எழுதவும் அவனது மனம் இடம் தர மறுத்தது.

தன் தாயாரைப் பிரிந்து வந்த இம் மூன்று தினங்களுக்குள்ளாகவே தனக்கும் அவளுக்கும் இடையில் ஒளிக்கவும், மறைக்கவும், தவிர்க்கவுமான இத்தனை விஷயங்கள் முளைத்து விட்டதை எண்ணி ஒருவித மிரட்சிக்குள்ளானான் அவன். (தொடரும்)

Printed & Published by R. Ananthanarayanan on behalf of Messrs. Bharathan Publications Private Limited at Kalki Press, Chetput, Madras-600031
Managing Editor: T. Sadasivam



# உங்கள் மகளின் எதிர்கால வாழ்க்கைக்கு பொறுப்பு நீங்கள்

அவளது வருங்கால, முற்றிலும் சுகமான வாழ்க்கையை நிச்சயப்படுத்துவதற்கு இன்றே பணம் சேமிக்கத் தொடங்குங்கள்.

சேமிக்கவும் மற்றும் கரண்ட், ஸேவிங்ஸ், ஃபிக்ஸெட், ரெக்கரிங் டிபாஸிட்டுகள் ஆகிய கணக்கு தொடங்குவதற்கான எல்லாவித சௌகரியங்களை யும் வழங்குகின்றோம்.




தலைமை அலுவலகம் : கல்கத்தா

UCO-7/73

REGISTERED No. M. 4392
registered as a Newspaper in Sri Lanka

# இந்த டார்ச்சு நிபுணர்களின் நம்பிக்கைக்குப் பாத்திரமானது

## எவரெடி
### நியுலிட்

டாக்டர்கள், நொடிப்பொழுதில் சக்தி மிகுந்த ஒளி கொடுக்கும் 'எவரெடி' டார்ச்சுகளையே நம்புகின்றனர். இந்த டார்ச்சு நேராக ஒளி வீசும்படி ஒழுங்கான மையத்தைப் பெற்றிருப்பதால் தொண்டை, கண், காது இவற்றைச் சோதனை செய்வதற்குச் சிறந்தவை.

நவீனகால குடும்பங்கள் 'எவரெடி' டார்ச்சுகளை வாங்கி, உபயோகித்தவண்ணமிருக்கின்றனர். இவ... தின் நேர்த்தியான தோற்றம் காரணமாயல்ல. ... டார்ச்சுகளை விட இவை மிக உறு... தியுடன் நீடித்த உழைப்பைத் தருகின்ற இணையற்ற புதிய பொருளால் தயாரிக்கப்பட்டிருப்பதால்தான்.

ரூ. 5.85
உள்ளூர் வரிகள் தனி



**எவரெடி — உன்னதமானவைகளில் முதன்மையானது**